# நீங்கள் நிம்மதியாக உறங்க வேண்டுமென்பதற்காக நாங்கள் உறங்காத இரவுகள் பல.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகாப்பு என்பது ஒரு அர்த்த மற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.





ஆம், இன்று இந்நாடு முழுவதிலும் இலட்சக்கணக்கானவர்கள் தங்கள் அன்புக்குரியவர்களான ஆயிரக்கணக்கான பஸ்/லாரி ஓட்டுபவர்கள், பயணிகள் தங்களிடம் பத்திரமாகத் திரும்பி வந்து விடுவர் என அமைதியுடன் நம்பிக்கையோடு உறங்குகின்றனர். சுந்தரம்-கிளேட்டனில், மிகவும் தனித்தன்மை வாய்ந்த இத் துறையில் முன்னோடிகளான நாங்கள், இந்த நம்பிக்கையை அளிக்கின்றோம் (அதிலிருந்து சாலைப் பாதுகாப்பின் புதியதோர் முறை உருவாகிவிட்டது.)

இன்று, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வண்டியிலும் எங்களுடைய காற்றுத் தடை உபகரணங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இத்துடன் நாங்கள் இருந்துவிடமாட்டோம். உங்களது பாதுகாப்பு எங்களுக்கு மிகப் பெரியதொரு பொறுப்பு. (அதற்காக நாங்கள் பல இரவுகள் உறக்கமின்றி உழைக்கத் தயாராக உள்ளோம்).

**உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்**

இன்றைய தொழில் நுணுக்க முன்னேற்றம், ஆராய்ச்சி, தாக்கட்டுப்பாடு, தரச்சிறப்புச் சோதனைகள் (உதாரணமாக ஒரு பிரேக்சேம்பர் டயாஃப்ரம் பல லட்சக்கணக்கான தடவைகளுக்குமேல் சோதிக்கப்படுகின்றது) இது போன்ற தொடர்ச்சியான சில வழி முறைகள் மூலம் நாங்கள் பிரேக் சாதனத்தை மட்டும் அளிக்கவில்லை, உங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிக்கும் ஒரு சிறந்த சாதனத்தையே அளிக்கின்றோம்

**நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம்— அதனைப் பாதுகாக்கவும்**

CD TVS அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி கொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள், மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்யவேண்டாம். உங்கள் நன்மைக்காகத்தான் சொல்கின்றோம்.

**சுந்தரம்-கிளேட்டன் லிமிடெட்**
பாடி, சென்னை 600 050

## உங்கள் பாதுகாப்பு எங்கள் தொழில்




SAA SCL 2587

● டேவிஸின் தலைமையில் அண்மையில் நடந்த டெஸ்ட் மாட்சுகளில் வெங்கட் சேர்க்கப் படாமல் இருந்து, இப்பொழுது மீண்டும் இந்தியக் குழுவில் கவாஸ்கர் தலைமையில், புதிய தெம்புடன், தமது சொந்த ஊரில் ஆட வரும் போது, தாங்கள் அட்டைப் படத்தில் வெங்கட் படத்தைப் பிரசுரித்தது மனத்துக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது.

சென்னை—5 என். வி. ராஜசேகர்

● தங்கள் கிரிக்கெட் ஸ்பெஷல் பிரமாதம். துணுக்குகள் யாவும் மிகவும் சுவையாக உள்ளன.

ஆனால் இரு தவறுகள் உள்ளன. ஒன்று, 37ம் பக்கத்தில் போர்டே இரு இன்னிங்ஸ் களில் செஞ்சுரி போட்டதாக இருக்கிறது. ஆனால் அவர் 2வது இன்னிங்ஸில் 96 ரன்கள் தான் எடுத்தார். இரண்டாவது, 47வது பக்கத்தில் திலீப் தேசாய் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இது திலீப் சர்தேசாய் என இருக்க வேண்டும்.

சென்னை—5 வி. ஹரிஹரன்

● வங்கி ஊழியர்கள் போராட்டம் என்று தான் எல்லாப் பத்திரிகைகளும் வரிந்து கட்டிக் கொண்டு எழுதுகின்றனவே தவிர எங்கள் கோரிக்கைகள் என்ன என்பது பற்றி எந்தப் பத்திரிகையும் அக்கறை எடுத்துக் கொள்வது இல்லை.

திருச்சி ஆர். சேஷாத்ரி

● கல்கியில் வெளிவரும் புதிய பகுதியான 'Face to Face' மூலம் பயனுள்ள கருத்துக்களை அறிய முடிகிறது.

விருத்தாசலம் பா. செந்தில்குமார்

● பொங்கல் சிறப்பிதழில் நான்கு எழுத்தாள நட்சத்திரங்களைக் கொண்டு ஒரு பலமான பொங்கல் விருந்து படைத்துவிட்டீர்கள்.

சென்னை—4 வெ. முத்துகிருஷ்ணன்

● ''திருச்சியில் ஓர் எழுச்சி'' தலையங்கத்தில் 'பிரார்த்தனை பற்றி தி. மு. க. காரர்களிடம் சொல்லிப் பயனில்லையே' என்று குறிப்பிட்டுள்ளீர்கள்.

நான் இருபது ஆண்டு காலமாகத் தி.மு.க. உறுப்பினன்தான். கட்சியில் அன்றும் இன்றும் பல பொறுப்பு உண்டு. ஆனால் தெய்வ நம்பிக்கை உள்ளவன். மிசாவிற்கு முன் தி. மு. க. காரர்கள் எப்படியோ. ஆனால் இன்று தி. மு. க.வில் உள்ள அறுபத்தைந்து சதவிகிதத்தினர் வழிபாடுகளில் ஈடுபட்டு விட்டார்கள்.

மங்களம்பேட்டை ஹாஜி எம். ஏ. பாரி

## வட்ட மேஜை



# உயர் ஊதியத் தீவு எனும் மாயை!

● 'பொங்கலோ பொங்கல்' — என்ற தலைப் பின்கீழ் கேலி அம்சம் மிகுந்துள்ள நகைச்சுவை ஓவியத் தொகுப்புக்களைக் கண்டு ரசித்த போது 'வெண்டலோ—வெண்டல்' என்று சொல்லிப் பாராட்டும்படி அமைந்திருந்தது.

செம்பியன் எழுதிய ''உயர் ஊதியத் தீவில் ஊதிய உயர்வு'' — என்ற கட்டுரை — ஒண்டர்புல்! அதற்காகவே செம்பியனுக்கு — ஊதியத்தை உயர்த்திக் கொடுங்கள்!

கடலூர்—2 தங்க — குஞ்சிதபாதம்

● ஏன் சார் எங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறீர்கள்? காரண காரியங்கள் தெரியாமல் ஸ்ட்ரைக் செய்து கொண்டிருந்த பாங்க் ஊழியர்களுக்குக் காரணங்களைக் காட்டிவிட்டீர்களே! இனி அவர்கள் வேலை நிறுத்தத்தைக் கைவிட்டாற் போலத்தான்!

திருச்சி—1 சங்கம் அருணகிரி

● மிகைப்படுத்தப்பட்டு எழுதப்பட்ட — Sarcasm கலந்த கட்டுரை என்று சொல்லலாமே தவிர, உண்மை நிலையை அது தெரிவிக்கவில்லை. மாறாக, ''உயர் ஊதியத் தீவு'' என்று யாரோ கிளப்பி விட்ட மாயையை அது மேலும் வலியுறுத்துகிறது அவ்வளவுதான்!

ராயப்பன்பட்டி ஈஸ்வர்குமார்

● ஜஸ்டிஸ் கோபிநாத் படவிமர்சனம் ஏ. ஒன். ''குறிப்பிட்ட ஒரு சமூகத்தைக் குத்துவதே தமிழ்ப் படத்துறைக்கும் பிழைப்பாகப் போய் விட்டது'' என கௌசிகன் தைரியமாக விமர்சித்து இருப்பதை நான் மிகவும் பாராட்டுகிறேன்.

கும்பகோணம் எஸ். தேவராஜன்

● மும்முனைகளின் மூன்றும் பகுதியும் தனிமையான நடையழகுடன் அமைந்து விட்டது. புதிய வேகம், புதிய உணர்ச்சிகள், புதிய உத்திகள் — இவற்றுடன் சமுதாயத் தேவைகள், கட்டுப்பாடுகள் பற்றியும் மும்முனைகள் தரும் கருத்துக்கள் சிந்தனையைக் கிளறுகின்றன.

சென்னை—33 கப்ரபாலன்

● ராஜகர்ஜனையை ஆர்வத்தோடு படித்து வருகிறேன். ஆங்கிலேய சரித்திர ஆசிரியர்கள் திப்புகல்தானை 'இருட்டடிப்பு' செய்து விட்டார்கள். இறுதியில் நடைபெற்ற ஸ்ரீரங்கப் பட்டினத்துப் போரில் திப்பு வென்றிருந்தால் இந்நாட்டின் சரித்திரமே மாறியிருக்கும். திரு. கோவி. மணிசேகரன் அவர்கள் உண்மையான சரித்திரத்தை உலகுக்கு அளிப்பார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.

திருநெல்வேலி—7 பாதுஷா

கல்கி

1979 ஜனவரி 28
காளயுக்தி தை 15

மலர்: 37 இதழ்: 26



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# சுவரண் சிங்கின் சரணாகதி

சரணாகதி என்று இந்திரா காந்தியின் பாதார விந்தங்களில் விழத் தயாராகி விட்டார் சுவரண் சிங். இதில் அதிசயமொன்றுமில்லை.

காங்கிரஸிலிருந்து ஒரு கூட்டம் பிய்த்துக் கொண்டு போய் ஒரு சர்வாதிகாரியின் பெயரில் வெட்கமின்றி ஒரு கட்சி அமைத்ததே அப்போதே இந்தச் சுவரண்சிங்கும் அங்கே போய்ச் சேர்ந்திருக்க வேண்டியவர்தான்.

ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. இந்திராவின் தந்திரம் அவரைத் தொடர்ந்து காங்கிரஸிலேயே தலைமைப் பதவியில் இருக்கச் செய்தது.

அரசியல் சாசனத்தைத் தமது சர்வாதிகாரத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ள வசதியாக இந்திரா இஷ்டப்படியெல்லாம் மாற்றி அமைத்தபோது அதற்கு ஆதரவாக ஊர் ஊராகச் சென்று பிரசாரம் செய்தவர் இந்தச் சுவரண் சிங்தான்.

பிறகு ஏன் அவர் இந்திரா காங்கிரஸில் அது தோற்றுவிக்கப்பட்டபோதே போய்ச் சேரவில்லை?

காங்கிரஸ் தலைவர்கள் பலரையும் வசப்படுத்திப் படிப்படியாக மனம் மாறச் செய்து ஒற்றுமை என்ற பெயரால் மறுபடியும் இந்திராவின் தலைமையையே ஏற்கச் செய்வது என்ற உள்நோக்குடன்தான் அவர் தொடர்ந்து காங்கிரஸ் தலைவராக நீடித்தார்.

இந்த ஐந்தாம்படைத் தனமான எண்ணம் இல்லாவிடில், சிக்மகளூர் தேர்தலின்போது இந்திராவைக் காங்கிரஸ் ஆதரிக்கவில்லை, ஆனால் ஜனதாவை எதிர்க்கும் என்று வஞ்சகமாக அறிவித்திருப்பாரா? அதன் மூலம் கேரள முதல்வர் அண்டொனியின் ராஜினாமாவுக்குக் காரணமாயிருந்திருப்பாரா?

அதேநேரத்தில் கரண்சிங்கும், சந்திரஜித் யாதவ்வும் சமர்ப்பித்த ராஜினாமாக்களை ஏற்றுக் கொள்ளாதது போல் நடித்து மூன்று மாதங்களுக்குப் பிறகு இப்போது திடீரென்று ஏற்றுக் கொண்டிருக்கிறார் காங்கிரஸ் தலைவர். காரணம், இந்திராவின் தலைமையை மீண்டும் ஏற்கக் கூடாது என்று காங்கிரஸின் உயர் மட்டத்தில் பிடிவாதமாக இருப்பவர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதுதான்.

இரு காங்கிரஸ்களும் இணைந்தபிறகு உருவாகும் ஐக்கிய காங்கிரஸின் இடைக்காலத் தலைமைப்பதவி தமக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்த்தார் சுவரண் சிங். ஆனால் அதுகூட நடக்காது. இந்திராதான் இடைக்காலத்திலும் சரி நிரந்தரமாகவும் சரி தலைமை வகிப்பார் என்ற சூழ்நிலை உருவாகி வருகிறது. கூட்டுத் தலைமை என்பதெல்லாம் இந்திராவைப் பொறுத்தமட்டில் வார்த்தை ஜாலம் மட்டுமே என்பது மீண்டும் மெய்ப்பிக்கப்பட்டு வருகிறது.

இருப்பினும்கூட சுவரண்சிங், 'ஒற்றுமை, ஒற்றுமை' என்ற ருத்திராட்ச ஜபத்தை விட்டாரில்லை. காரணம் பதவி ஆசை. சுவரண் சிங்கும் அவரைச் சுற்றியுள்ள பலரும் காங்கிரஸ் தனித்து நின்று பதவிக்கு வரமுடியாது. இந்திரா காந்தி என்ற பிரபையைப் பயன்படுத்திப் பாமர மக்களை வசீகரித்தாலன்றித் தேர்தல்களில் ஜெயிக்க முடியாது என்று நம்புகின்றனர். எனவே சர்வாதிகாரத் தலைமையை ஏற்கத் தயாராகிறார்கள்.

'சஞ்சய் காந்தியிடமிருந்து இந்திரா காந்தியைக் காப்பாற்றவேணும், இரு காங்கிரஸ்களும் இணைய வேண்டும்' என்றாராம் சித்தார்த்த சங்கர் ரே. இதுபோன்ற அபத்தமான கண் துடைப்பு வாதங்களை வெளியிட்டுச் சரித்திரப்

பெருமை மிக்க காங்கிரஸ் கட்சிக்கு இழுக்குத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

நெருக்கடி நிலைப்பிரகடனங்களின் போது நடந்த அட்டூழியங்களுக்கு இன்றுவரை வருந்தி ஒரு வார்த்தை கூறாததோடு அவற்றை நியாயப்படுத்தியும் வரும் இந்திரா காந்தியை விட, அவரை அன்றே எதிர்த்துப் பேசாதது தவறு என்று உணர்ந்து இன்று அவரது தலைமையை ஏற்க மறுக்கும் சுரன்சிங், சந்திரஜித் யாதவ், சரத் பவார், ஹிதேந்திர தேசாய் போன்றவர்கள் எவ்வளவோ மேல்.

இவர்கள் சுவரண்சிங்கின் சூழ்ச்சியை முறியடித்து இரு காங்கிரஸ்களும் இணையாமல் காத்தார்களேயானால், அல்லது, இணைவதாயின் இந்திரா காந்தியின் தலைமை இணைந்த காங்கிரஸுக்கு இல்லாமல் செய்வார்களேயானால், காங்கிரஸுக்கும் தேசத்துக்கும் மாபெரும் சேவை செய்தவர்களாவார்கள். ஒருவேளை இச் சாதனையைப் புரிய இவர்களால் முடியாது போனால் தங்களுடைய சுயகௌரவத்தையாவது காப்பாற்றிக் கொள்வார்கள் என நம்புகிறோம்.



# துளசி மணம் நுகர்ந்தோம்!

● 'நாத்திகம்' என்பதை ஒரு குறிப்பிட்ட சமூக, மத எதிர்ப்புக்களாக மட்டுமே பார்த்துப் பழகிய நமக்கு உண்மையான நாத்திகனை அடையாளம் காட்டியிருக்கிறார். 'பூரணி' — 'மோகினி' — வரிசையில் 'கமலி' யும் நெஞ்சத்தளத்தில் நிலைத்திருப்பாள்.

தெய்வானை, சேவற்கொடியோன்

● பாத்திரப் படைப்புக்கள் என்றும் மறக்க இயலாதவை. நல்லதோர் இனிய நாவலைப் படைத்த நா.பா.வுக்கும் — பாத்திரங்களுக்கு ஏற்பச் சித்திரம் வரைந்த ஜி.கே. மூர்த்திக்கும் நன்றி!

காட்பாடி கோ. குப்புசாமி

● சற்பாத்திரமாக ஒரு மேல்நாட்டுப் பெண்ணை உருவாக்கி, ''பண்டித: சமதர்ஸின:'' என்னும் மறைமொழிக் கேற்ப, சமநோக்குப் பெற்ற உண்மை வைதிகருக்கு மாட்டுப் பெண்ணுக்கிக் கலாசாரப் பரிமாற்றம் ஏற்படுத்தியது இந்தக் கதையின் மிகச் சிறப்பான அம்சமாகும்.

மதுரை—16 ஆர். அழகியநம்பி

● முதலிலிருந்தே கமலியின் பாத்திரத்திற்கு முரண்பட்ட காமாட்சியம்மாள் கடைசியில் திடீரென வலுவான காரணமின்றி மனமாற்றம் அடைந்ததை என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

விருத்தாசலம் எம். ஏ. அப்துல்காதர்

● கமலி போன்ற சில அயல் நாட்டினர்கூடப் போற்றிப் பெருமைப்படுத்தும் நம் கலாசாரப் பழக்கங்களை நாம் கொஞ்சம் கொஞ்சமாக மறந்து வருகிறோம் என்பதை நினைக்கையில் நெஞ்சில் வேதனை நிறைகிறது!

கோம்பூர் பாரத்வாஜன்

● விடியற்காலையில் நீராடி, என் தோட்டத்து மலர்களையே பறித்து, அம்பாளுக்கு சஹஸ்ரநாம அர்ச்சனை செய்து முடித்த நிம்மதி ஏற்பட்டது ''துளசிமாடம்'' படித்து முடித்த பிறகு.

சென்னை—18 பத்மாமணி

---

# ராஜாஜி அளித்த ஊக்கம்

என் பெண் பி. எஸ். ஸி. (ஹோம் ஸயன்ஸ்) படிப்புக்காக லேடி இர்வின் (டெல்லி) கல்லூரியில் சேர்ந்த பொழுது எனது உறவினர்களும், நண்பர்களில் சிலரும், ''வீட்டு வேலைக்கும் சமையல் காரியங்கள் கற்கவும் பட்டப்படிப்பு எதற்கு?'' என்று அவளைக் கேலி செய்தார்கள். இதனால் மனம் வருத்தப்பட்டு என் பெண் ராஜாஜிக்கு அது விஷயமாகக் கடிதம் எழுதினாள். அதற்கு வந்த பதில்:

ஆசீர்வாதம்,

ஹோம் ஸயன்ஸ் மிகவும் நல்ல படிப்பு. யார் செய்யும் கேலியைப் பற்றியும் கவலைப் பட வேண்டாம். எந்தப் பாடமும் அக்கறையுடன் படித்தால் நல்ல படிப்பே ஆகும். உன்னுடைய தமிழ் நன்றாகவே இருக்கிறது. அதைப் பற்றியும் கவலை வேண்டாம்.

பிறர் சொல்லுவதைப் பொருட்படுத்தாமல் ஹோம் ஸயன்ஸை அக்கறையுடன் படிப்பாய். இராஜகோபாலாச்சாரி

இளம் மனத்தைப் புரிந்து கொண்டு தைரியமும் உற்சாகமும் ஊட்டி ராஜாஜி எழுதிய கடிதம் நல்ல பலன் அளித்தது. என் பெண் பி. எஸ்ஸி-யில் கல்லூரியில் முதலாவதாக வந்ததோடு மேன்மேலும் பல பட்டங்கள் பெற்று இப்பொழுது (கனடாவில்) ஒரு புகழ் பெற்ற மருத்துவ ஆராய்ச்சி நிலையத்தில் புற்று நோய்ப் பிரிவின் டைரக்டராக இருக்கிறாள்.

சென்னை—90 ராஜம் கோபாலன்

## திருவாசக மகாநாட்டுக்குப் பின்...














# சிதம்பரம் (ஸ்டேடியம்) போகாமலிருப்பேனே?

**அச்சாணி**



என்னதான் டி. வி.யில் கிரிக்கெட் மாட்ச் காண்பித்தாலும் சிதம்பரம் போகாமலிருப்பேனு என்று சென்னை வாசிகள் ஏராளமாய்க் குழுமிவிட்டனர் ஸ்டேடியத்தில்.

கிரிக்கெட் டெஸ்டுக்கே அச்சாணி 'பிட்ச்' தான்! இந்தியாவில் தாம் ஆடிய பிட்ச்களிலே சிதம்பரம் ஸ்டேடியம் பிட்ச் பிரமாதம் என்று மேற்கிந்தியத் தீவுக்குழு காப்டன் காளிசரண் சான்றிதழ் வழங்கிவிட்டார்.

'பூவா தலையா' சோதனையில் 'எனக்குத்தான் வெற்றி!' என கவாஸ்கர் கையைத் தூக்கினர்! 'இல்லே, எனக்குத்தான்!'' என்ருர் காளிசரண். உண்மையில் மேற்கிந்தியத்தீவுக் குழுவுக்கே 'டாஸ்' வெற்றி! அப்புறம் இருவரது தலையெழுத்தையும் நிர்ணயிக்கப்போவது 'பிட்ச்'தான் என்ருகி விட்டது.

### வட்டத்துக்குள் சதுரம்:

அம்பயர் சொருப் கிஷன் ருவா இடதுகை, வலது கை ஆட்டக்காரர்கள் மாறி மாறி ஆடியபோது மாறி மாறி நிற்க வேண்டியவராஞர். அவர் நடப்பதும் ஓடுவதும் ரஸிகர்களுக்குக் கொண்டாட்டமாயிருந்தது. வஞ்சனையில்லாமல் பருத்திருந்த அவரைப் பார்த்து ரசிகர்களும் வஞ்சனையின்றித்தான் சிரித்தார்கள்!

### காற்றினிலே வரும் கீதம்:

டிரான்ஸிஸ்டர் பாட்டு மட்டுமல்ல. பல கவிதைகளே பிறந்தன ஸ்டேடியத்தில். இதுமாதிரிக்கு ஒன்று. கே. ராமமூர்த்தி கவாஸ்கர் பற்றி இயற்றியது:

ஆட்டத்தின் கலைதெரிந்த சீராளன்
ஆசியாவின் நிகரற்ற வீரனிவன்
நாட்டமிகு மட்டையடிப் பேராளன்
நாலாயிரம் ரன்குவித்த சூரனிவன்.

இந்திய வெற்றிக்குத் தம் பௌலிங்கில் வித்திட்ட வெங்கட்.

இந்திய அணிக்குப் பாட்டிங்கில் வெற்றி சம்பாதித்துத் தந்த விசுவநாத்.

### அக்னிப் பிரவேசம்:



முதலில் பிரவேசித்த பக்களைப் பூஜ்ய இலகமாக்கி வந்தவுடனே மைதானத்தை விட்டுக் கிளப்பியவர் கபில்தேவ். வெங்க்சர்க்கார் காட்சை நழுவவிடாமல் பிடித்தார். சிம்மம் போல் பாய்ந்து இரண்டாவது காட்சைப் பிடித்த பெருமை சேர்த்துக் கொண்டார் நரசிம்மராவ்! கோம்ஸ் வெளியேறினுர், 14 ரன்களுக்குள்! இரண்டாவது விக்கெட்டையும் வீழ்த்தியவர் கபில்தேவ்.

வெங்கட்டின் 'ஆப் ஸ்பின்' வீச்சுக்கு கிரீனிட்ஜ் விக்கெட் பெயில் சரிந்தது. முர்ரே பயத்திலே ஹிட்விக்கெட் ஆனுர்! நெருப்பாகச் செயல்பட்ட இந்திய பீல்டிங்குக்கு பாரிரன் அவுட்!

மேற்கிந்தியத் தீவின் முதல் பிரவேசத்திலே 68 ரன்களுக்குள் 6 விக்கெட்கள் பலியானது.

### இறைவன் கொடுத்த வரம்:

செலக்டர்கள் கல்கத்தா டெஸ்டுக்குத் தம்மைத் தேர்ந்தெடுத்தவுடனே நரசிம்ம ராவ் முதலில் செய்த காரியம் திருப்பதி மொட்டை!

### சக்கைப் போடு போடு ராஜா!

மேற்கிந்தியத் தீவுக் குழுவில் ஒருபக்கம் சடசட வென்று விக்கெட்கள் சரிய மறுபக்கம் கோட்டையாக நின்று பல கோணங்களில் சக்கைப்போடு போட்டவர்





மேற்கிந்தியத் தீவுக் குழுவில் கோம்ஸ் அபாரமாக ஆடி நற்பெயர் பெற்றார்.

ஹோர்க்கின் பௌன்சர் விக்கருக்குத் தலை குனிவு!

காப்டன் காளி சரண். அவரது 98 ரன்களில் பவுண்டரிகள் 16.

## இது எப்படி இருக்கு?

கடைசியாக வந்த பாட்ஸ்மன்கள் ஹோர்க்—ஹோல்டர். இவர்கள் இரு சிக்ஸர்களை அடித்தது, 'இது எப்படி இருக்கு?' என்று ரசிகர்களை நோக்கிக் கேட்பது போலிருந்தது!

மேற்கிந்தியத் தீவுக் குழுவில் கடைசி பாட்ஸ்மன் வரை ஒரு 'கை' பார்ப்பார்கள் என்பதை இந்த சிக்ஸர்கள் உணர்த்தின.

## மச்சானைப் பார்த்தீங்களா?

"என்னை பம்பாயில் 'மாதவ் மந்திரியின் மருமான்' என்பார்கள். 1971ல் மேற்கிந்தியத் தீவுக்குச் சென்றிருந்தபோது அங்கே என்னைத் தேடி வந்த பிரபல ஆட்டக்காரர்கள் 'Where isthat little man?' என்றனர். பெங்களூரில் என்னை 'விசுவநாத்தின் மச்சினன்' என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். என்னை காப்டன் கவாஸ்கராகக் கௌரவிப்பது நீங்கள்தான்!" என்று Madras youths Gathering அளித்த வரவேற்பில் நெகிழ்ந்து கூறினார் காப்டன் கவாஸ்கர்.

காப்டன் கவாஸ்கர் நாலே ரன்கள் முதல் இன்னிங்ஸில் எடுத்தாலும், அதிலும் ஒரு ரிகார்டு கண்டார். மேற்கிந்தியத் தீவுக் குழுவுக்கெதிராக அதிக ரன்கள் எடுத்த பெருமையைச் சூடிக் கொண்டார்!

## முடிசூடா மன்னன்:

கிரிக்கெட்டில் முடிசூடா மன்னன் விசுவநாத். 364 நிமிஷங்கள் நிலைத்து நின்று ஆடி இந்திய ஸ்கோர் 255ல் 124 ரன்களை (17 பவுண்டரிகள் உள்பட) எடுத்து முதன்மையுற்றார்.

## சங்கர் சலீம் சைமன்:

பெவிலியனில் ஆட்டோ கிராப் வேட்டைக்காரர்களின் மத்தியில் சிவ்நாராயண் தென்பட்டார்.

அவர் கழுத்திலே சிலுவைச் சின்னம் இணைந்த சங்கிலி தொங்கியது. 'நீங்கள் கிறிஸ்துவரா?' என்று ஆச்சரியத்துடன் சிலர் கேள்வி எழுப்ப, 'ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதே என் கோட்பாடு' என்று பளிச்சென்று பதில் வந்தது!

## பல்லாண்டு வாழ்க!

எம். ஜி. ஆர். — லதா மாட்சுக்கு வந்து சேர்ந்து அமர்ந்திருந்த காட்சி டி. வி.க்காரர்கள் கண்ணில் பட்டது! ஆனால் பெவிலியன் டெர்ரஸில் 82 வயது முதியவர் இயோதர் அமர்ந்து கண்ணாடி இல்லாமல் மாட்சைக் கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருந்ததை ரொம்பப் பேர் கவனித்திருக்க மாட்டார்கள். 1941–42ம் ஆண்டிலேயே சேப்பாக்க மைதானத்தில் ரஞ்சித் கோப்பைப் பந்தயத்தில் ஆடியவர் இவர். இளவரசர்

திலீப் சிங் கையிலிருந்து கோப்பையைப் பெற்றவர்.

## நிழல் நிஜமாகிறது !

கல்கத்தா டெஸ்டில் சக்கைப் போடு போட்ட கவாஸ்கர் — வெங்க்சர்க்கார் ஆகிய இருவரையும் இங்கே பக்கஸ் 'லைக்' என்று காட்ச் பிடித்துப் பெவிலியனுக்கு அனுப்பி வைத்தார். பீல்டிங்கில் அசகாய சூரரான இவர் இப்பொழுது 'ஹோம் சிக்' என்று கேள்வி!

## சீர்வரிசை :

காவ்ரி டெஸ்ட்களில் 50வது விக்கெட் எடுத்த சாதனையைக் கண்டார்.

முதல் இன்னிங்ஸில் வெங்கட் மூன்றாவது விக்கெட்டை வீழ்த்தியபோது அவர் டெஸ்ட்களில் 125 விக்கெட்டுகளை எடுத்த ரிகார்டு கண்டார்! மேற்கிந்தியத் தீவுக்குழுவுக்கெதிராக 50 விக்கெட்டுகள் எடுத்த பெருமையும் வெங்கட்டுக்கு உண்டு. இதற்கு முன் மேற்கிந்தியத் தீவுக் குழுவின் 50 விக்கெட்டுக்களை எடுத்தவர்கள் பேடி, சந்திரசேகர் ஆகியோர்!

மேற்கிந்தியத் தீவு கோஷ்டியின் இரண்டாவது இன்னிங்க்ஸ் ஸ்கோர் 151. இது ரிகார்டில் அவர்களுக்குக் கிடைத்த மிகக் குறைந்த ஸ்கோர்.

## தப்புத் தாளங்கள் !

கிளார்க், பீலிப் இரண்டாம் இன்னிங்ஸில் பௌன்சர் வீசி இந்திய பாட்ஸ்மன்களைப் பயமுறுத்தினர். சௌகான் தலையில் ஹெல்மட் அணிந்து ஆடினார்!

## ருத்ர தாண்டவம் :

பௌன்சர் கன்னத்தைத் தாக்க வெங்க்சர்க்கார் வேதனை அடைந்திருந்தார். தொடர்ந்து உறைகளையும் மட்டையையும் தரையில் ஓங்கியடித்தார்! பீலிப் பந்தைத் தரையில் ஓங்கி வீசினார். இரு கோஷ்டிகளுக்குமே வெற்றிபெற்ற வாய்ப்பு இருந்தபோது இந்த ருத்ர தாண்டவம் நடந்தது. கௌரவமான கிரிக்கெட் அல்ல இது.

## ஆயிரம் ஜென்மங்கள் :

மேற்கிந்தியத் தீவு குழுவினர் கடைசிவரை போராடியதை மெச்சத்தான் வேண்டும். கிளார்க், பீலிப், ஹோல்டர் வெற்றியைத் தங்கள் பக்கம் திரும்ப எடுத்துக் கொண்ட முயற்சிகளின் விளைவாக ஏழு விக்கெட்டுகள் விழுந்தன. யார் வெற்றி பெறுவார்கள் என்பதைக் கடைசிவரை நிர்மாணிக்க முடியாத 'திரில்'லை மாட்ச் தந்தது!

கபில்தேவ் ஆட வந்தவுடனே, வெற்றிக்கு அவர் பந்தை விளாச வேண்டுமே, அதேநேரம் அவுட்டாகாமலும் இருக்க வேண்டுமே என்பதால் 'கபீல் கபீல்' என்று இருந்தது. ஆனால் 'டுமீல் டுமீல்' என்று பவுண்டரி ஷாட்களாக அடித்து வெற்றியைத் தேடித் தந்து விட்டார்!

## கண்ணாமூச்சி :

பம்பாய், பெங்களூர், கல்கத்தா தராத வெற்றியைச் சென்னைப் பட்டணம் தந்தது. அனைவரையும் குதூகலத்தில் ஆழ்த்திவிட்டது. என்றாலும் இது பிரமாதமாகப் பெருமை பீற்றிக் கொள்ளக் கூடிய வெற்றியல்ல என்ற நினைவும் கூடவே எழுந்து கொண்டிருக்கிறது.

புகைப்படங்கள் : என். பாலாஜி

— குண்டுமணி

---

# அறிமுகம் —

வேடந்தாங்கலில் பறவைகள் சரணாலயம் ஒன்று இருப்பது பலருக்கும் தெரியும். அங்கே இன்னொரு சரணாலய மும் உள்ளது. இலக்கிய சரணாலயம் அது!

''இலக்கிய வீதி'' என்ற அமைப்பில் இளைஞர்கள் பலர் இணைந்து நல்ல இலக்கிய முயற்சிகளை அலசிப் பார்த்து விமர்சிக்கின்றனர்கள். மாதம் ஒரு கூட்டம் மதுராந்தகத்தில் போடுகிறார்கள். சிறுகதைகளைக் கையெழுத்துப் பிரதிகளாகவே வரவேற்றுப் பார்த்துப் படித்து மாதமொரு சிறந்த கதையைத் தேர்ந்தெடுத்து அதனைத் தங்கள் அமைப்பின் சிபாரிசுடன் பத்திரிகைகளுக்கு அனுப்பி வைக்கிறார்கள். இவ்விதம் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகளின் தொகுப்பு ''மீண்டும் மீண்டும்'' என்ற தலைப்பில் வெளி வந்து பல பத்திரிகைகளில் நல்ல விமரிசனம் பெற்றுள்ளது.

இளைஞர்களின் அமைப்பாக இருந்தபோதிலும் விரசத்துக்கு இடமளிக்காத உயரிய சிந்தனைகளைக் கொண்டிருப்பது இன்றைய இளைஞர்கள் விரசத்தைத்தான் விரும்புகிறார்கள் என்ற பரவலான அபிப்பிராயத்தைத் தவிடு பொடியாக்குகிறது. இலக்கிய வீதியினைக் குப்பை சேராமல் துப்புரவாக வைத்திருக்கும் வாலிபர்களுக்குப் பக்கபலமாக இருக்கும் அமைப்பாளர், இனிய சுபாவமுள்ள வரும் பெயரிலேயே இனிமையைக் கொண்டிருப்பவருமான திரு இனியவன். விலாசம்: இலக்கிய வீதி, விநாயகநல்லூர், வேடந்தாங்கல் அஞ்சல் — 603 303. 'மீண்டும் மீண்டும்' புத்தகத்தின் விலை ரூ 3.50

இனியவன்



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

## 2. இதெல்லாம் நடந்த பிறகு...

இவளைக் கோதை என்று கூப்பிடுகிறார்கள். இவள் குடும்பம் தீவிர வைணவம்... அவளுக்குச் சிங்கார வேலனை மிகவும் பிடித்திருந்தது. அவனும் 'சித்தி சித்தி' என்று அவளுடன் ஒட்டிக் கொண்டான். முதல் முறையாக இந்தக் கலியாணத்தின் நிமித்தமாக மருடேசன் விளக்குச்சாமியை ஒரு வார காலமாகப் பிரிந்திருக்கிறார். இவர் மனம் சாமியாரைப் பற்றி அடிக்கடி நினைக்கிறது. கடைசியில் பத்து நாட்களுக்குப்பின் எல்லோரும் ஊரிலிருந்து வந்தபோது விளக்குச் சாமி வண்டி கட்டிக்கொண்டு, ரயிலடிக்குப் போய் மருடேசன் பிள்ளையை அவரது புது மனைவியுடன் வரவேற்று அழைத்து வந்தார்.

கோதையைக் காந்திமதிக்குப் பிடித்திருந்தது. காந்திமதி கோதையிடம் பேசுவதில் மகிழ்ச்சி கொண்டாள். கோதைக்கோ வந்த உடனேயே இந்த வீட்டின் ரகசியங்களும் இந்த வீட்டின் தலைவனின்பால் இவர்களுக்குள்ள பழுதுபட்ட உறவுகளும் அச்சமூட்டுவதாகவும், அது இவருக்குத் தெரிந்தால் என்ன ஆகும் என்ற எண்ணம் கவலையூட்டுவதாகவும் இருந்தது. இதனிடையே தான் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதில் சிக்கலும் உண்டாயிற்று... மேலுக்கு அமைதி காட்டிக் காலம் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

சிங்காரம் 'மீன்' வேண்டுமென்று பிடித்த அடத்தில் ஒருநாள் அந்தப் பயங்கர ரகசியம் பிள்ளைக்கே தெரியவந்தது. இந்தத் துரோகத்தால் நிலைகுலைந்து போயிருந்த வரின் தலையில் பேரிடியாய் விழுந்தது இன்னொரு செய்தி: ''மருமகள் மங்களம் முழுகாமல் இருக்கிறாள்...'' இரண்டாம் கல்யாணத்தின் நிமித்தம் மருடேசன் பிள்ளை ஊரிலில்லாதிருந்த அந்தப் பத்து நாட்களும் பெரியசாமி வீட்டுக்கு வந்து தங்கியிருந்தான்.

''என் பெண்டாட்டியை இவர் வீட்டிலே வெச்சிக்கிட்டு என்னைப் படியேறாதேங்கறாரே.. இவரு புத்தியை என்னன்னு சொல்றது... இந்தப் பொண்ணுக்கும் மாமனார் கிழிச்ச கோட்டைத் தாண்ட முடியாது... என்ன என் கதை இப்படி இருக்கே'' என்று அந்தப் பெரியசாமி தன்னை நொந்து பேசும்போது அவன் அங்கு வந்து மனைவியுடன் தங்கியிருக்கும் உரிமையை யாராலும் மறுத்திருக்க முடியாது.

விளக்குச் சாமியிடம்தான் புலம்பினார் மருடேசன்பிள்ளை: ''எல்லாரும் துரோகிங்க... இவங்கள்ளாம் என்ன ஜென்மம்? ஒரு நம்பிக்கைக்குத் துரோகம் பண்ணின அப்புறம் என்ன சாமி பிடிமானம் இருக்குது உயிர் வாழ்க்கைக்கு?'' என்று கொதித்தார். ''என் வீட்டுக்குள்ளே எனக்குத் தெரியாம ரகசியமா ஒருத்தன் வந்துட்டுப் போறதுன்னா... அது என் மகனா இருந்தா என்ன? இன்னொருத்தனா இருந்தா என்ன?... நாளைக்கே அந்தப் பெரியசாமி பயலைப் பார்த்து அவன் பொண்டாட்டியை இழுத்துக்கிட்டுப் போகச் சொல்லணும்'' என்று அவர் புலம்பி முடித்தபோது ''இது தங்கமான யோசனை'' என்றும் மருடேசன் பிள்ளையைப் பாராட்டி மகிழ்ந்தார் விளக்கு.

பெரியசாமி மங்களத்தை அழைத்துக் கொண்டு போய்ப் பழனியாண்டவர் கோயிலுக்கருகே உள்ள, தன் பங்குக்கு வந்த ஒரு பழைய வீட்டில் குடித்தனம் வைத்தான். பகல் பூராவும் சந்நிதித் தெருவிலும் இரவில் தன் வீட்டிலும் இருந்தான் பெரியசாமி.

''சாமி... நெனைச்சா ஆறமாட்டேங்குது... புத்திக் குழம்புது; உயிர் வாழ்க்கையே பிடிக்கலே... இந்தக் கோதை நல்லவளா கெட்டவளான்னு தெரியலே... பெரிய தூலக்காரியா இருக்காளே.. திருட்டுத்தனமா மீன்வாங்கிச் சமைச்சிச் சாப்பிடறா போல இருக்கு... எக்கேடும் கெடட்டும். ஆனால் சிங்காரம் பையனுக்கும் அந்தப் பழக்கத்தை உண்டாக்கி வெச்சிருக்காளே... இது துரோகமில்லையா... எவளாவது எதையாவது திங்கட்டும்... என் மகனுக்கு என்னத்துக்குச் சாமி அதையெல்லாம் பழக்கணும்... முடியாது சாமி... இனிமே அவ கையால தண்ணிகூட வாங்கிக் குடிக்க முடியாது... அவளைப் பார்க்கவே எனக்குப் பயமா இருக்கு. மோகினிப் பிசாசு மாதிரி இருக்கு'' என்று குழந்தைபோல் பிள்ளை பொருமினார்... ''விதி விளையாடுகிறது'' என்று முனகிக் கொண்டார் சாமியார். ''பிள்ளை, நீங்க சொல்லிக்கினே இருக்கீங்களே, உயில் — அதை

எழுத வேண்டிய நேரம் வந்தாச்சு'' என்றார் சாமியார்.

**ம**ருடேசன் பிள்ளைக்கு அன்னத் துவேஷமே ஒரு வியாதி மாதிரி அவரைப் படுக்கையில் தள்ளியது. நெடுநாள் நினைத்திருந்த அந்த உயிலைப் போன வாரம் எழுதி முடித்தார். மருடேசன் பிள்ளை உயில் எழுதுகிற விஷயம் ஊர் பூராவும் பரவியது. அவர் நியாய மாகவும் தர்மம் வழுவாமலும் நடந்து கொள்ளுவார் என்ற நம்பிக்கை ஒவ்வொரு வருக்கும் அவர் மீது இருந்தது. எனினும் பெரியசாமிக்கு அவர் தமது சொத்திலிருந்து ஒன்றுமே தரவில்லை என்ற விஷயம் அவரது உதாரகுணத்துக்குப் பொருந்தாத கறையாக அந்த உயிலில் படிந்திருந்தது. சொத்துக் களெல்லாம் மருடேசன் பிள்ளை தலையெடுத்து விருத்தி பண்ணினதும் அவரது பாட்டன் சேர்த்த சொத்துக்களுமாகும். பாட்டன் சொத்து மட்டும் என்றால் இவ்வளவு இடை யாது. இப்போது அவர் இருக்கும் வீடும், கோயிலுக்குக் கொடுத்திருக்கும் நிலமும் தான் பூர்வீகம். அந்தப் பூர்வீகச் சொத்தைப் பெரியசாமி ஏற்கெனவே பிரித்துக்கொண்டு போய் விட்டிருந்தான். அதனாலே ''அவனுக்கு ஒன்னும் சட்டப்படியும் இடையாது; தர்மப் படி யாசகம் போல ஏதாவது என்னிடம் கேட்டு வாங்கிக்கிற நிலை அவனுக்கு வர வேண்டாம்'' என்று முடிவு செய்திருந்தார் பிள்ளை.

ஆண்வாரிசுகளான சிங்காரத்துக்கு ஒரு பங்கு, அந்த 'ஒன்பதாவதுக்கு' ஒருபங்கு. ஆறு பெண்களுக்கும் ஒருபங்கு. கோதைக்கு ஒரு சம பங்கு.

அந்த உயிலில் தனக்குப் பிறகு வாழப் போகிறவர்களின் பட்டியலில் தன்னிலும் மூத்தவரான விளக்குச் சாமியையும் குறிப் பிட்டிருந்தார் பிள்ளை. ''இன்னும் கொஞ்ச நாளிலே இந்த விளக்குகள் எல்லாம் மாறிப் போகும். அப்போது எனது ஆப்தராக விளங்கும் விளக்குச் சாமிக்கு வேலையில் லாமல் போய்விடக் கூடாது. எனது மனைவி யும் குழந்தைகளும் வசிக்கிற வீட்டில் அவர் எப்போதும் போல இருந்துவர வேண்டியது. அவருக்கு வருஷத்துக்கு இரண்டு வேட்டிகள் — இரண்டு துண்டுகள், கைச்செலவுக்குத் தேங் காய்க் கிடங்கிலிருந்து மாதம் ஒரு ரூபாய் பணம் சாமியாரின் ஆயுள் பரியந்தம் தந்துவர வேண்டியது...''

மருடேசன் பிள்ளை தமது சொத்தில் பெரிய சாமிக்குப் பங்கு கொடுக்காதபோதும் அவனையே, 'கார்டியனாகப்'போட்டு உயில் எழுதியிருந்தார். ''எனது இளையபுதல்வர்கள் சிங்காரவேலுவும், வைத்தியநாதனும் மைனர்களாக இருக்கின்ற காரணத்தாலும் மற்றவர்கள் பெண் மக்களான படியினாலும் எனது இரண்டாவதுமகன் சிங்காரவேலு பிள்ளை மேஜராவதற்கு முன் என் காலம் முடிந்து விடுகிற பட்சத்தில் சிங்கார வேலு பிள்ளை மேஜராகிற வரைக்கும் இந்தச் சொத்துக்களை நிர்வாகம் பண்ணி வர வேண்டிய பொறுப்பை என் மூத்தமகன் பெரியசாமியே ஏற்றுக் கொள்ள வேண் டியது. எனக்குப் பிள்ளையாகப் பிறந்ததாலும் ஒரு தகப்பன் என்கிற முறையிலும் நான் அவ னுக்கு இதை ஒரு ஆக்ஞையாகவும் வேண்டு கோளாகவும் பிறப்பிக்கிறேன்'' என்ற பகுதி எப்படிச் சரியாகும் என்று சிவ பாக்கியத்தம்மாளுக் குத் தோன்றியது கோதைக்கும் கூட நியாயமாகப் பட்டது.



மூத்தவனான அவ னுக்கு சொத்தில் பங்கு தராமல், அவனையே கார்டியனாக நியமிப் பது எவ்வளவு சிக்கல் களை, தப்பெண்ணங் களை, விரோதத்தை ஏற்படுத்தும் என்று விவேகத்தோடு அஞ்சி னள் மருடேசனின் சம்பத்தியான சிவ பாக்கியம்.

கோதை மிகுந்த அன்போடும் பரிவோடும் பிள்ளைக்கு சிசுருஷைகள் செய்துகொண்டிருந் தாள்.

சிங்காரம் எப்போதும் போல் தரையில் கவிழ்ந்து படுத்துப் புள்ளிகளை வைத்துப் பெரிய கோலம் போட்டுக் கொண்டிருந்தான். அவன் போட்டிருக்கிற அதீதமான புள்ளிகளி னூடே அதற்குரிய விதியுடன் எங்கெங்கோ கொண்டு அவன் கோடுகளை இணைத்துச் சேர்த் துக் கோலங்களாக்கிக் கொண்டிருந்தான்.

பிள்ளையுடன் பேசிக் கொண்டிருந்த விளக்குச்சாமி, திடீரென்று பதறினர் : ''அம்மா... அம்மா கொஞ்சம் தண்ணி கொண்டுவா... சீக்கிரம்... பிள்ளை! என்ன பண்ணுது?'' என்று உரத்து ஒலித்த சாமி யாரின் குரல் விபரீதமாய்க் கேட்டது கோதைக்கு... அவள் தண்ணீருடன் வரு வதற்குள் ...

மருடேசன் பிள்ளை அம்பிகையுடன் ஐக்கிய மாகியிருந்தார். கோதையின் கையிலிருந்த தண்ணீர்ச் செம்பு நழுவியது. சிங்காரம் கூடத்துத் தரையில் கவிழ்ந்து படுத்து வரைந்து கொண்டிருந்த அந்தப் பெரிய கோலம் இன்னும் முடியவில்லை.

* * *

**ம**ருடேசன் பிள்ளை வீட்டில் என்று மில்லாத பிரகாசத்துடன் ஏராளமான விளக்குகள் எரிகின்றன.

நடுக்கூடத்தில் மார்பு அளவு உயர வெண் கலக் குத்துவிளக்குகள் ஐந்து முகங்களிலும் சுடர் கொண்டு எரிகின்றன. அந்த மூன்று கட்டு வீட்டின் எல்லாப் பகுதிகளிலும் விளக் கெரிவது இதுமாதிரி கல்யாணம், காரியம் என்று விசேஷங்களைக் கொண்டாடுகிறார்கள் என்று ஊருக்கு அறிவிக்கும். திண்ணைக்கும் தெருவுக்கும் வெளிச்சம் தெரிவதற்காக நடையில், கூரை முகப்பிலிருந்து தொங்கும் ஒரு கம்பியில் ஊசலாடும் பெரிய அரிக்கேன்; உள்ளே மூன் கட்டுக் கூடத்திலும் தாழ்வாரங்



களிலும் ஒளி மழை பொழியும் லஸ்தர் விளக்கைச் சுற்றிலும் தொங்குகின்ற கண்ணாடி மணிகள் வர்ண ஜாலங்கள் இழைத்தவாறு, மெல்லிய இனிய ஓசைகளையும் அவ்வப்போது ரகசிய மொழிகள் போல் முணுமுணுக்கின்றன. அந்த ஒலி ஓர் இனிய இசைபோல் இழைகிறது. இவை தவிர அங்கங்கே காமாட்சியம்மன் விளக்குகளும் நீளமாய்ச் சிமினி யிட்ட கவர் விளக்குகளும், மாடக் குழிகளில் ஒளித் திலகமிட்டதுபோல் அசையாது உயர்ந்து சுடர் பரப்பும் அகல் விளக்குகளும்... வீடு அரண்மனை மாதிரி ஜொலிக்கிறது.

வீட்டுக்கு முன்னால் இரு மருங்கிலும் உள்ள பெரிய திண்ணைகளில் பிரப்பம் பாய்கள் விரித்து அங்கவஸ்திரம் அணிந்த பெரியவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். தெருவிலும் குறட்டிலும் குழந்தைகள் துரத்திப் பிடித்து விளையாடுகிறார்கள். வரிசையாய் அமைந்துள்ள பித்தளைப் பூண்களிட்ட திண்ணையின் தூண்களைப் பிடித்து மத்துச் சுற்றி விளையாடுகின்றன சில குழந்தைகள்...

வீட்டுக்குப் பின்னால் வெட்டவெளியில் மண் தரையில் நீளமான அடுப்புக்களை வெட்டிக் கானவாய் மாதிரி கனன்று எரியும் அக்கினிக் குண்டங்களில் பெரிய பெரிய பாத்திரங்களில் விருந்து சமைக்கிறார்கள். பொறி பறந்து எரியும் கானவாய் அடுப்புக்களைச் சுற்றிக் கைவிளக்குகளை ஏந்தியவாறு வீட்டுப் பெண்களும் வேலையாட்களும் அங்கும் இங்கும் உத்தரவிட்டுக் கொண்டு உரத்த குரலில் ஒருவரையொருவர் கூவியவாறு திரிகிறார்கள்,

இத்தனைக்கும் மத்தியில் உள்கூடத்தில் மகுடேசன் பிள்ளையின் பிரிவுக்காகத் துக்கம் கொண்டாடி ஒப்பாரி வைத்துப் பாடி அழுகிற பெண்களின் குரலும், ஒப்பாரித் தமிழும் வாழ்க்கையின் அமரத்துவமான சோகத்தை வழிபடுகின்றன போலும்!...

நடுக் கூடத்தில் மகுடேசன் பிள்ளைக்குப் பூஜை நடக்கிறது. அவரது மூக்குக் கண்ணாடி, பாதக் குறடுகள், கைத்தடி, மைபுட்டி, பேனா, பேரேடு முதலிய அவர் அன்றாடம் உபயோகித்த பொருள்களும் புதிய சரிகைக்கரை வேட்டியும் அங்கவஸ்திரமும் அவரே அங்கு சாந்நித்தியம் பெற்றது போன்ற பிரமையை ஏற்படுத்துகின்றன.

மூத்தவள் காந்திமதிக்கு இதெல்லாம் ஒன்றும் புதிய சோகமாகவோ, பெரிய துக்கமாகவோ தோன்றவில்லை. ஒப்புக்குச் சிணுங்கிச் சிணுங்கி அழுகிறாள். கண்ணீர் வரமாட்டாதது குறித்து அவளுக்கே சங்கடமாக இருக்கிறது. கூடச் சேர்ந்து கட்டியழும் சகோதரிகளின் புஜத்திலும் முந்தானையிலும் முகத்தை மூடிக் கொள்வதன் மூலம் தனக்குக் கண்ணீர் வராததைப் பிறர் அறியாமல் மறைத்துக் கொள்கிறாள்.

அவள் பொய்யாக அழுவதை நிஜமென்று நம்பி அவள் வளர்ப்புச் செல்வம் வைத்தி வீறிட்டு அலறுகிறான். அவனுடைய சோகை உடம்பு, இந்த வீறிடும் அதிர்ச்சியைத் தாங்குமா என்று மனம் பதைக்கிறாள் காந்திமதி. ''ஏன் சனியனே, இங்கே வந்து நின்னுக்கிட்டு அழுவறே?... போ! முன் கட்டிலே கொழந்தைங்க எல்லாம் விளையாடிக்கிட்டு இருக்குதுங்க — நீயும் போய் விளையாடு'' என்று அவனைத் தேற்றிக் கொண்டு வந்து முன் கட்டுக் கூடத்தில் விட்டாள் காந்திமதி.

அந்தக் கூடத்தின் நடுவே கிடந்த பிரம்பினான பெரிய சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து — அதன் முன்னால் கைகள் மாதிரி மடக்கத் தகுந்த மரப்பலகைகளைச் சேர்த்து, அதன் மீது பல வண்ண மணிகள் நிறைந்த ஒரு வெள்ளித் தட்டிலிருந்து ஊசியும் நூலும் வைத்துக் கொண்டு என்னவோ ஒரு மணிப் பின்னல் வேலையில், நாக்கைத் துருத்திக் கொண்டு முனைந்திருந்தான் சிலுக்கு சிங்காரம்.

காந்திமதி வைத்தியைத் தூக்கி வந்து அவன் பக்கத்தில் உட்கார வைத்து, ''உங்க அண்ணாத்தை கூட இரு... பாத்தியாடியம்மா!... என்ன மாதிரி அழகழகான மணியெல்லாம் இருக்குது... இந்தாடா சிங்காரம், தம்பியைப் பாத்துக்க — அங்கே கட்டிக்கிட்டு அழுவற இடத்திலே வந்து இவனும் அழுவறான்...'' என்று சொல்லிக் கொண்டே பின் கட்டுக் கூடத்தில் அழுகிற கூட்டத்தில் கலந்து கொள்ளுவதற்காக... சிணுங்கி அழுகையை வரவழைத்துக் கொண்டு நடந்தாள்.

சிலுக்குவின் தலை மழுங்கச் சிரைக்கப்பட்டிருந்தது. வெல்வெட் சராயும் சட்டையும் அதே கெம்பு வண்ண நிறத்தில் தொப்பியும் அணிந்திருந்தான் சிலுக்கு.

இப்போதெல்லாம் அவனுக்குப் பெண் வேஷம் கட்டிவிட யாரையும் அனுமதிப்பதில்லை. ஆனாலும் அவனைச் சுற்றிப் பெண் குழந்தைகளே சூழ்ந்திருந்தனர். அவன் அவர்களை அடித்தான்; விரட்டினான்; தலையைப் பிடித்திழுத்துக் கதற வைத்தான்; காதைத் திருகினான்... அவன் என்ன செய்தபோதிலும், அதற்காகப் பயந்த குழந்தைகளும் கூடச் சிலுக்குவிடம் சிநேகம் கொண்டாடவே விரும்பின. பெண் குழந்தைகள் மட்டுமல்லாமல் அந்தத் தெருவிலுள்ள, எல்லா வயதுப் பெண்களும் அவனது கோலம் போடுகிற, மணிப் பின்னல் செய்கிற, பூ தைத்துவிடுகிற, எம்பிராய்டரி தைக்கிற கைவண்ணத்தில் மயங்கிக் கிடந்தனர்...

அவன்தான் மகுடேசன் பிள்ளைக்குக் கொள்ளி போட்டான். மூத்தவன் இருந்தும் அப்படித்தான் நடக்க வேண்டும் என்று மகுடேசன் பிள்ளை உயில் எழுதி வைத்திருந்தார்.

தன்னை எவ்வளவுதான் தகப்பனார் வெறுத்துத் துறந்த போதிலும் பெரியசாமி தன் தந்தையின் மீது தெய்வபக்திக்கு இணையான மரியாதை வைத்திருந்தான். அவரது கோபமும் வெறுப்பும் ஒரு தகப்பன் என்ற முறையில் நியாயமானது என்றே அங்கீகரித்திருந்தான். அவர், பூர்வீகமான சொத்துக்களில் அவனுக்கு இருந்த பாகத்தை ஒதுக்கித் தந்ததல்லாமல், தனது பெருஞ் செல்வத்தில் அவனுக்காக ஒன்றுமே தராதது குறித்தும் கூட அவன் வருந்தவில்லை. ''என் மூத்த மகன் பெரியசாமியை நான் மனத்தளவில் துறந்துவிட்ட படியினால் அவன் எனக்குக் கொள்ளி போடலாகாது...'' என்றும் ''எனது பூரணமான வாரிசாக நான் வரித்துவிட்ட எனது இரண்டாவது மகன் சிங்காரமே எனக்குக் கொள்ளி போட வேண்டியது'' என்றும் அவர் எழுதி வைத்து விட்டுப்போன வாசகங்கள்தான் பெரியசாமிக்கு மாறாத வருத்தத்தைத் தந்தது...

அந்த வருத்தங்களையெல்லாம் மனத்துள் புதைத்துக் கொண்டு ஊருக்காகவும், சொந்தக்காரர்களின் மத்தியில் மரியாதை கெட்டுவிடக் கூடாது என்பதற்காகவும், எல்லாவற்றுக்கும் மேலாய் அவன் மகுடேசன் பிள்ளையை மனதார நேசித்ததனாலும் தகப்பனாரின் இறுதிச் சடங்குகளில் கண்ணீர் வழிய ஒருபுறம் ஒதுங்கி நின்று கலந்து கொண்டான்.

(தொடரும்)

---

''அடடா! ஒரு நிமிஷம் முன்னே நீங்க பிறந்து இருந்தீங்கன்னு இன்னிக்கு இந்தியாவின் பிரதமராகி இருக்கலாம்''

''அப்பாடி! தப்பித்தேன்.''







✕ ராதா விசுவநாதன்

✕ சதாசிவம் தம்பதி

தமக்கு வாழ்வளித்த சிங்கப்பூரில் பல நல்ல காரியங்களுக்கு உதவிய கொடைவள்ளல். தாய் நாட்டையும் மறவாமல் தமிழ் நாட்டில் பல அறக் கட்டளைகளை ஏற்படுத்திப் பல நற்பணிகளுக்கு ஏராளமாக நன்கொடைகள் வழங்கியுள்ளார்.

இப்போது அவருக்கு வயது 91. ஆயினும் சுறுசுறுப்பு சிறிதும் குன்றாதவர். காரணம் நியமம் தவறாத வாழ்க்கை.

கனமான கண்ணாடி போட்டுக் கொண்டு இன்றும் அவர் திரும்பத் திரும்ப வாசிப்பது –

# சிங்கப்பூரின் அதிர்ஷ்டம்!



✕ கோவிந்தசாமி பிள்ளை

சிங்கப்பூர் வாசிகள் அதிர்ஷ்டசாலிகள்.

சிங்கப்பூரில் வாழ்வதாலேயே அதிர்ஷ்டசாலிகள்!

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசைக் கச்சேரிகளை அடுத்த மாத ஆரம்பத்தில் கேட்டு மகிழப் போகிறார்கள் என்பதால் அதிர்ஷ்டசாலிகள்.

இவற்றை விடவும் மேலாக அதிசய மனிதர் திரு கோவிந்தசாமி பிள்ளை அவர்களிடையே வசிக்கிறார் என்பதாலும் சிங்கப்பூர் வாசிகள் அதிர்ஷ்டசாலிகள்!

திரு கோவிந்தசாமி பிள்ளை கட்டிய வேஷ்டி, போட்ட சட்டை தவிர வேறெதுவுமின்றித் தமது இளம் பிராயத்திலேயே சிங்கப்பூர் சென்றடைந்தவர். விடாமுயற்சியால் முன்னுக்கு வந்து இன்று பெரும் செல்வந்தராகத் திகழ்பவர். ஆனால் பார்ப்பதற்கும் பழகுவதற்கும் எளியவரினும் எளியவராக விளங்குபவர்.

காந்திஜியின் சுயசரிதை – 'கல்கி' அவர்களின் மொழி பெயர்ப்பான "சத்திய சோதனை".

"இதைப் படித்தால் போதுமே" என்கிறார் கோவிந்தசாமி பிள்ளை. "எத்தனையோ பல அறநூல்களைப் படித்த நற்பயன் இதிலேயே கிடைத்து விடுமே!"

இத்தனை வயதுக்குப் பிறகு திரு கோவிந்தசாமி பிள்ளை ஒரு பெரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டார். சிங்கப்பூரில் பெருமாள் கோயில் ஒன்று கட்டி முடிக்க முயற்சி மேற்









✕ கண்டதேவி அழகர்சாமி (வயலின்)

✕ மூர்த்தி (மிருதங்கம்)

✕ நாகராஜன் (கஞ்சிரா)

✕ விநாயக்ராம் (கடம்)

கொண்டார். எடுத்த காரியம் யாவிலும் வெற்றி பெற்று வந்துள்ள அவர் இதிலும் வெற்றி பெற்றார். பிப்ரவரி 2ந் தேதி கும்பாபிஷேகம் நடக்கிறது.

கும்பாபிஷேகத்தையொட்டி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, சிங்கப்பூர் வந்து கச்சேரி செய்ய வேண்டும் என்பது அவர் விருப்பம். ''சென்ற முறை எம். எஸ்., சிங்கப்பூர் வந்த போது எத்தனையோ பேர் அவரது கச்சேரிகளுக்கு டிக்கெட் கிடைக்காமல் திரும்பிப் போனார்கள். இந்த முறை அவர் சிங்கப்பூர் வரும்போது யாருக்குமே ஏமாற்றத்துக்கு இடமில்லாமல் எல்லோரும் அவரது இன்னிசையைக் கேட்டு இன்புற டிக்கெட் இல்லாமல் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் கச்சேரியை ஏற்பாடு செய்யப் போகிறேன்'' என்று கொடை வள்ளல் திரு கோவிந்தசாமி பிள்ளை பலம் பூரித்து அறிவித்துள்ளார்.

நல்ல காரியங்கள் யாவிலுக்கும் கை கொடுத்து உதவத் தயங்காத ஸ்ரீசதாசிவம் தம்பதி, ''ஒன்றென்ன, மூன்று கச்சேரிகள் வேணுமானாலும் இலவசமாக நடத்தித் தருகிறோம்'' என்று கூறிவிட்டனர்.

எனவேதான் இம்மாதக் கடைசியில் ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ்., ஸ்ரீமதி ராதா விசுவநாதன் ஆகியோருடன் பக்க வாத்தியக் காரர்களான ஸ்ரீ அழகர்சாமி (வயலின்) ஸ்ரீ டி. கே. மூர்த்தி (மிருதங்கம்) ஸ்ரீ வி. நாகராஜன் (கஞ்சிரா) ஸ்ரீ விநாயகராம் (கடம்) ஆகியோரும் சேர்ந்து சிங்கப்பூருக்குப் பயணமாகிறார்கள்.

இசைத் தூதர்களுக்கு, ''சென்று வருக, வென்று திரும்புக'' என்று விடை கொடுத்து அனுப்புகிறோம்.

இசையில் திளைத்துப் பக்தியில் உருகப் போகிற சிங்கப்பூர்வாசிகளை மனமார வாழ்த்துகிறோம்.

இதற்கெல்லாம் காரணகர்த்தாவான கோவிந்தசாமி பிள்ளைக்குப் பெருமாளின் பரிபூரண அனுக்கிரகத்தை வேண்டிப் பிரார்த்திக்கிறோம்.

மேலட்டை: ஸ்ரீமதி எம். எஸ். வண்ணப்படத்தை எடுத்தவர்: கே. எஸ். ராமானுஜம்.

-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-x-

# கிண்டல் கிட்டா!

ஏய்... என்னான்னு என்னை நினைச்சுக்கிட்டிருக்கீங்க! வீட்டிலே அவங்கவங்க வேலையை ஒழுங்கா செய்யணும். இல்லே, ஒழுங்கா வேலை நடக்கிறதுக்கு என்ன செய்யணுமோ அதைச் செய்யத் தயங்க மாட்டேன்.

ஸ்ட்ரைக் பண்றீங்களாம், ஸ்ட்ரைக்! சும்மா இருந்தா தலையிலே மொளகா அரைக்கிறீங்களே! இந்த வீட்டிலே நடக்கிறது ஜனதா ஆட்சியில்லே கிட்டா ஆட்சி ஞாபகம் வெச்சுக்குங்க!



## ஸோபர்ஸ் சாதனை

1966-67ல் காப்டன் ஸோபர்ஸ் தலைமையில் வந்த குழுவில் காப்டன் ஸோபர்ஸ் உன்னதமாக ஆடி அனைவரது உள்ளத்தையும் கவர்ந்தார். பம்பாய், கல்கத்தா டெஸ்ட்களில் இரு வெற்றிகளைச் சம்பாதித்துக் கொண்டு சென்னை வந்தார். சேப்பாக்கத்தில் தோல்வியை நெருங்குமாறு பிரசன்னாவும் பேடியும் அபாரமாகப் பந்து வீசினர். ஆனால் காப்டன் ஸோபர்ஸ் அடித்த இரு காட்ச்களை இந்தியக் குழுவினர் நழுவ விட்டனர். அதன் விளைவு காப்டன் ஸோபர்ஸும் பௌலர் கிரிப்பித்தும் நிலைத்து நின்று ஆடி ஆட்டத்தை வெற்றி தோல்வியின்றி முடித்தனர். 7 விக்கெட் இழப்புக்கு 193 என இருந்த எண்ணிக்கையை அவர்கள் இருவரும் 7 விக்கெட்டுக்கு 270 என்ற எண்ணிக்கைக்கு எடுத்துச் சென்றனர். பௌலர் கிரிப்பித் தம் காலாலேயே (Pad) பந்தைத் தடுத்து நிறுத்தி ஆடியது அபூர்வக் காட்சி.



## முதலும் முடிவும்

சேப்பாக்கத்தில் மேற்கிந்தியக் குழுவிற்கும், இந்தியக் குழுவிற்கும் நடந்த நான்காவது கிரிக்கெட் டெஸ்டில் முதல் நாள் முதல் ஓவரில் ஒரு பேட்ஸ்மேன் அவுட். அன்றைய கடைசி ஓவரில் ஒரு பேட்ஸ்மேன் அவுட். இதேபோல் இரண்டாம் நாளன்றும் முதல் ஓவரில் ஒருவர் அவுட். கடைசி ஓவரில் ஒருவர் அவுட். - நா. தேவ

கண்களில் மை, மங்களமாய் நெற்றிக்
குங்குமம், பின்னிய கூந்தலில் செவ்வந்தி;
பேரழகு மேனிக்கோ பொர்க்கினி சிற்றுடை, விமல் சீர்வரிசை...

# விமல் படைப்பு:

# பொர்க்கினி

கோவார்டினேட்ஸ்




பொர்க்கினி
கோவார்டினேட்ஸ்
கண்ணுக்குக் கவர்ச்சி,
கட்டழகு மலர்ச்சி!

# தொழில்துறை பீடுநடை போடுகிறது

பாரத தேசத்தின் இதயப் பகுதியிலே அமைந்துள்ள ஆந்திரப் பிரதேசத்துக்கு இயற்கை தன் செல்வங்களை ஏராளமாக வாரி வழங்கியுள்ளது. பழைமையின் பெருமையும் புதுமைத் தொழில்களின் உறைவிடமும் சர்வதேச கலை, கலாசாரங்கள் சங்கமிப்பதாகவும் உள்ள தலைநகரைச் சரித்திர காலத்திலிருந்து இது அடைந்துள்ளது. ஆந்திரப் பிரதேசம் ஒரு நம்பிக்கை நட்சத்திரம்.

இம்மாகாணத்தின் தொழில் வளம் வியத்தகு சாதனைகளைக் கொண்டது. பெரியதும், நடுத்தரமானதுமான 478 கோடி ரூபாய்கள் மூலதனத்துடன் சுமார் 260 தொழிலகங்களைக் கொண்டுள்ளது. கடந்த நான்கு ஆண்டுகளின் ஸ்தாபன ரீதியான பொருளாதார வளர்ச்சி நான்கு மடங்காகப் பெருகியுள்ளது. காக்கிநாடாவில் 232 கோடி மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்டுள்ள புதிய உரத் தொழிற்சாலைக்கு கடந்த 1978ம் ஆண்டு ஜூலை 7ம் தேதி ஜனாதிபதி அவர்கள் அடிக்கல் நாட்டினார்கள். அது தன் உற்பத்தியை 1981ல் ஆரம்பிக்க இருக்கிறது.

வளர்ச்சிப் பணிகளுக்கு வழிவகுக்கும் கழகங்களான ஆந்திரபிரதேஷ் இண்டஸ்டிரியல் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன் (APIDC) ஆந்திரபிரதேஷ் ஸ்டேட் ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (APSFC) ஆந்திரபிரதேஷ் இண்டஸ்ட்டிரியல் இன்ஃப்ராஸ்டெரக்சர் கார்ப்பரேஷன் (APIIC) ஆகியவை மாகாணத்தின் வட்டார வளர்ச்சிப் பணிகளில் முக்கிய பங்கு வகிக்கின்றன.

DG. I & P.R. 32-78-79

## அத்தியாயம் 9

நாகேஸ்வர ராவ் பூங்காவில் குரோட்டன்ஸ் செடிகளும் காளு வாழைகளும் உயரமாக வளர்ந்திருந்த அந்த இடத்தின் இருபுறமும் பெஞ்சுகள் போடப் பட்டிருந்தன. அவற்றுள் சாலையைப் பார்க்க இருந்த பெஞ்சைத் தவிர்த்து மற்றொன்றில் அமர்ந்து தீபக்கின் வருகைக்காகக் காத்திருந்தாள் கலோசனு. கையிலிருந்த பாடப் புத்தகத்தைப் படிப்பது போன்ற பாவனையில் பிரித்து வைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் மனம் காதலனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் அதில் எப்படி லயிக்கும்? பின்னால் அவள் அறியாமல் வந்த தீபக், வகுப்பில் கேள்வி கேட்பது போல், ''கருத்தில் உறை கள்வன் எனல் ஆனான் — இடம் சுட்டிப் பொருள் விளக்குக!'' என்றான்.

''முதன் முதலில் நாம் சந்திச்ச இடம் என் கல்லூரிதான். சேரிடிபால்-ஃபாஷன் பரேட் நடத்தினோம். முதல் நிகழ்ச்சியே என்னுடைய நடனம் தான். அது முடிந்ததும் ஒப்பனையைக் கலைத்து விட்டு அரங்கை விட்டுத் திறந்த வெளிக்கு வந்தேன். கூட்டத்தில் ஒருவராக ஓரமாய் உட்கார்ந்திருந்த நீங்க, என்னைப் பார்த்துவிட்டு எழுந்து வந்தீங்க. 'ரொம்ப



# மும்முனைகள்

கி.ராஜேந்திரன்

நன்னு ஆடினீங்க' என்று சொல்லி கங்ராஜுலேட் செய்தீங்க. அந்தக் கணத்திலிருந்து நீங்க என் மனத்தில் உறை கள்வன் தான் எப்படியோ கள்ளத்தனமா உள்ளே நுழைஞ்சுட்டீங்க, வெளியே போக வழி தெரியாமத் தவிக்கிறீங்க!''

''வழி தெரியாம இல்லே, வெளியேற விரும்பலே'' என்றான் தீபக். ''கலோ! ராமனும் சீதையும் முதன் முதலிலே சந்திச்சப்போ ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொண்டது பற்றிச் சொல்லுவாயே...?''

''ஆமாம், கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று உண்ணவும்...''

''ஆ! அதுதான் அதுதான்! அதே மாதிரி இப்போ நீயும் நானும் ஒருவரை யொருவர் பார்த்துக்கணும். சரிதானா? கண்ணைக் கொட்டவே கூடாது! எவ்வளவு நேரம் அப்படி இருக்க முடியும்?. பார்த்துக்கலாமா?''

''அதெல்லாம் முடியாது! நாம் சந்திக்கிற நேரமே அதிக பட்சம் போனால் பத்துப் பதின் மூன்று நிமிஷம்; அதிலேயும் வாய் திறக்காமல் பார்த்துண்டே இருந்தா என்ன பிரயோஜனம்? பேச வேண்டியது எவ்வளவோ இருக்கே!''

''உன் அழகு என்னை வாயடைத்துப் போகச் செய்து விடுகிறது, கலோ!''

''ஐயோ! ரொம்ப ரொம்பப் பழைய சினிமா டயலாக்! நானு வார்த்தை கலகலவென்று பேசினால் உங்களுக்கு என்ன ஆகி விடும்?''

''கலகலன்னு எப்படிப் பேசறது? நம்ம நிலைமையை நினைச்சால் பொல பொலன்னு கண்ணீர்தான் வருது.''

''ஏன்? எதுக்காகப் பெண் பிள்ளை மாதிரி கண்ணீர் விட்டுக்கிட்டு உட்கார்ந்திருக்கணும், நீங்க? என் அப்பாவிடமும் உங்க அப்பாவிடமும் நம் காதல் விஷயம் பற்றிக் கண்டிஷனா பேசிட வேண்டியதுதானே?''

''அதற்குத்தான் சந்தர்ப்பம் எதிர் பார்த்துக்கிட்டிருக்கேன், கலோ. ஆனால் நம்மிடையே அந்தஸ்தில் இருக்கிற ஏற்றத் தாழ்வுகளையும் நாம் வெவ்வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் என்பதையும் நினைச்சால் ரொம்பத் தயக்கமாயிருக்கு. இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்துக்க. அதற்கிடையில் உன் வீட்டில் உன் கல்யாண விஷயமா ஏதாவது பேச்சு எடுத்தால், படிப்பு முடிச்சுப் பட்டம் வாங்கினப்புறம்தான் கல்யாணம்னு

சபதம் எடுத்திருப்பதாக ஒரே போடாகப் போட்டுவிடு!''

''அது நல்ல ஐடியாதான். உங்களுக்குத் தைரியம் வர வரைக்கும் நான் பட்டம் வாங் காமல் பரீட்சைகளில் ஃபெய்ல் ஆகிக்கிட்டே இருக்கலாம்'' என்றான் கலோ. ''ஒரு வாரம் முன்னால் என் அப்பா, 'உன் மனசுலே இருக்கிறதைச் சொல்லட்டுமா?' என்று 'மைண்ட் ரீடர்' மாதிரி ஆரம் பிச்சாரே, அப்பவே அவரை நீங்க தொடர்ந்து பேச விட்டிருக்கலாம். காரியம் சுலபமா முடிஞ்சு போயிருக்கும். நீங்க என்னடான்னா பயந்துட்டீங்க...''

''அது பயமில்லே கலோ, அதற்குப் பெயர் மரியாதை. உன் அப்பாவிடமும் என் அப்பா விடமும் எனக்கு உள்ள மரியாதை காரணமா அவங்க மனம் புண்ணாயிடுமோ, கவலைப் படுவாங்களோன்னு நான் தயங்கிக்கிட் டிருக்கேன்.''

''அப்போ, இதுக்கு முடிவுதான் என்ன?'' என்று கலோசனா கேட்டாள்.

''நீ ராமனைத்துதி; ஏகலை நான் வணங் கறேன். அவங்க ரெண்டு பேருமாச் சேர்ந்து நம் இருவருக்கும் ஒரு வழி காட்டட்டும் '' என்றான் தீபக்.

கலோசனாவின் பெருமூச்சு முழுவதுமாக அடங்குமுன்னர், அவர்களுக்குப் பின்னா லிருந்த குரோட்டன்ஸ், கானா வாழைச் செடி களுக்கு மறு புறத்திலிருந்து ''டார்லிங்!'' என்று ஒரு பெண் குரல் கேட்டது! இருவ ருக்குமே தூக்கிவாரிப் போட்டது என்றாலும் அடுத்து ஒலித்த ஆண் குரலைக் கேட்டதும் கலோசனாவுக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது!

• • •

பெண்கள் கிரிக்கெட்டின் இறுதி மாட்ச் அன்று மெரினாவில் மாநிலக் கல்லூரி மைதானத்தில் நடந்தது. கல்லூரி மாணவி களும் மாணவர்களும் நிரம்பப்பேர் கூடியிருந் தார்கள். பிரமீளாதான் வெற்றி பெற்ற டீமில் அதிகப்படியான ரன்களை எடுத்திருந் தாள். அவளுடைய ஒவ்வொரு ஷாட்டுக்கும், ''வெல்டன் பிங்கி! மார்வலஸ்!'' என்றெல் லாம் பாராட்டுக்கள் மாணவர், மாணவியர் இரு தரப்பிலிருந்தும் போட்டி போட்டுக் கொண்டு கிளம்பின. கடைசியில் ஓர் ஆஃப் ஸ்பின், பாட்டின் ஓரத்தைத் தொட்டு விக்கெட் பில் காட்சாக மாறி விடவே பிங்கி பெவிலிய னுக்குத் திரும்பினாள். மாணவர்கள் பலர் மாணவியரை முந்திக் கொண்டு அவளைச் சூழ்ந்து பாராட்டினர். கரம் குலுக்கினர். பிரமீளா எல்லாரிடமும் சகஜமாகப் பேசி இயல்பாகக் கைகுலுக்கினாள். மாட்ச் முடிந்து அவள் சத்யாவுடன் புறப்படத் தயாராகும் வரை அவன் அவளுடன் பேசவில்லை. அவன் ஸ்கூட்டரைக் கிளப்ப அதனை உதைத்த வேகத்தில் அவன் கோபம் தெரிந்தது. அந்த வாகனம் மிகக் குறைந்த கால அளவில் சாந்தோமை அடைந்து கச்சேரி ரோட்டில் திரும்பி முன்னேறியதிலும் அந்தக் கோபம் புரிந்தது. வழி நெடுக இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. நாகேஸ்வர ராவ் பார்க் அருகே வண்டியை நிறுத்திவிட்டு இருவரும் இறங்கி நடந்தார்கள்.

இப்போதுதான் பிங்கி முதலில் பேசி னாள்: ''யூ ஆர் ஆக்டிங் வெரி ஸில்லி! நீங்கள் இப்படிக் கோபப்படும்படி இப்போது என்ன ஆகி விட்டது? என் ஆட்டத்தைப் பாராட்டி ஒரு வார்த்தை கூடச் சொல்ல முடியாதபடி அவ்வளவு பொறாமையா?''

''அப்படித்தான் வைத்துக்கொள்ளேன்.''

''இந்தப் பொறாமை எனக்கு ஒரு பக்கம் பெருமையாக இருக்கிறது; இன்னொரு புறம் சிரிப்பாயிருக்கிறது'' என்றாள் பிங்கி. ''உங்கள் காதலி உமன்ஸ் லிப ரேஷன் பற்றிப் பேசினால் பூரித்துப் போகி றீர்கள்; அவள் பேண்ட்டும் ஷர்ட்டும் அணிந்து மட்டை பிடித்துப் பவுண்டரி அடிக்கும்போது ஆனந்தப்படுகிறீர்கள்; ஆனால் அவளைப் பாராட்டி நாலு ஆண்கள் பேசி அவள் கரத்தைக் குலுக்கி விட்டால்



பொறுமையால் வெந்து போகிறீர்கள். ஆக மொத்தம் உமன்ஸ் 'லிபரேஷனை உங்கள் மனம் உண்மையில் ஏற்கவே இல்லை' என்பது தான் இதற்கு அர்த்தம்.''

அவன் கோபம் தணியாமலும் அவளைப் பாராமலும் இருந்தான்.

''டார்லிங்!'' என்றாள் பிங்கி; குழைந்து.

அந்தச் சொல்தான் செடிகளுக்குப் பின்னால் இருந்த சுவோசனுவின் காதில் விழுந்து, அவளைத் தூக்கி வாரிப் போடச் செய்தது. அவள் உன்னிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தாள். அவள் கேட்டுக் கொண்டிருப்பது அறியாமல் பிரமீளாவும் சத்யாவும் உரையாடலைத் தொடர்ந்தார்கள்.

இரண்டாவது தடவையாக, ''டார்லிங்! பிளீஸ்!'' என்று பிங்கி கெஞ்சலாக அழைத்த போது, சத்யாவால் பேசாதிருக்க முடியவில்லை. அவள் கரங்களைப் பற்றி, ''ஸ்வீட் ஹார்ட்!'' என்றான்.

''அப்பாடா!'' என்றாள் பிங்கி ''ஒரு வழியா உங்களைப் பேச வைச்சாச்சு!''

''நீதான் இன்றைக்கு டாப் ஸ்கோரர் என்பது நிச்சயமானதுமே அதைப் பாராட்ட உனக்கும் எனக்குமாக இரண்டு ஐஸ்கிரீம் கோன் வாங்கினேன்.''

''அப்படியா! ஆனா என்னிடம் தரவேயில்லையே?''

''எப்படித் தருவது? நீ அவுட் ஆகாமல் ஆடிக் கொண்டே இருந்தாய். ஐஸ்கிரீமோ உருகிக் கொண்டே இருந்தது. அதனால் இரண்டையும் நானே மாற்றி மாற்றிச் சாப்பிட்டு விட்டேன்.''

''என்ன ஃப்ளேவர்?''

''ஸ்டிரா பெர்ரி!''

பிரமீளா சப்புக் கொட்டினாள். ''எனக்குப் பிடித்த ஃப்ளேவர்'' என்றாள்.

''பிடித்த ஃப்ளேவரா? நான் கூட அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன்!''

''எதனால் அப்படி நினைச்சீங்க?''

''அதைச் சாப்பிடறப்போ...''

''சாப்பிடறப்போ?''

''எப்படி இருந்தது தெரியுமா?''

''எப்படி இருந்தது?''

சத்யா அவள் அதரங்களில் தனது வலது கரத்தின் ஆள்காட்டி விரலை வைத்தான். ''சொல்லட்டுமா?'' என்றான்.



"வேண்டாம்! வேண்டாம்! எனக்கு வெட்கமாயிருக்கும்" என்றாள் பிரமீளா!

"அடேடே! நிஜமாகவா பிங்கி? உனக்கா வெட்கமாயிருக்கும்? எங்கே, எங்கே கொஞ்சம் வெட்கப்பட்டுக் காட்டேன். எனக்குப் பார்க்க வேணும் போல் ஆசையாயிருக்கு" என்று கிண்டல் செய்தான் சத்யா.

இதற்குமேல் அங்கு அவர்கள் பேச்சை ஒட்டுக் கேட்கவோ, தப்பித் தவறி அவர்கள் கண்ணில் பட்டுவிடவோ விரும்பாத கலோசனா, தீபக்குக்கு ஜாடை காட்டிவிட்டு மெல்ல எழுந்து எதிர்த்திசையில் நழுவிச் சென்றாள். தீபக் அவளைப் பின்தொடர்ந்தான். அவர்கள் கண்ணில் படாத தொலைவு சென்றபின், "கேட்டீங்களா அவங்க பேசிக்கிறதை?" என்று காதலனைக் கேட்டாள் கலோசனா. "எவ்வளவு ஃப்ரீயா இருக்காங்க, நீங்க என்னடான்னா நாலு வார்த்தை பேச நாலு நாழிகை யோசனை பண்ணறீங்க."

"ஃப்ரீயாப் பேசக் கூடிய அதிர்ஷ்டசாலிகள் அப்படி நடந்துக்கறாங்க; யோசனை பண்ண வேண்டிய நிலையில் இருக்கிறவங்க யோசனை பண்ணித்தானே ஆகணும்?" என்றான் தீபக்.

இருவர் நெஞ்சங்களிலிருந்தும் இரு நெடு மூச்சுக்கள் ஏககாலத்தில் எழுந்தன.

## அத்தியாயம் 10

காரியாலயத்தில் தமது அறையில் ஏதோ ஒரு ஃபைலில் கவனம் செலுத்தி அதில் ஆழ்ந்து போயிருந்த வைத்தியலிங்கம் யாரோ தம்மெதிரே நடமாடுவதை உணர்ந்தார். முன் அனுமதியின்றி அறைக்குள் வர அருள்ராஜ் ஒருவருக்குத்தான் உரிமை உண்டு. எனவே, அருள்ராஜ் தான் தம்மெதிரே வந்து நிற்கிறார் என்பதை ஊகித்தவராகத் தலையை நிமிர்த்தாமலேயே, "எஸ், அருள்! என்ன விஷயம்? உட்காரு" என்றார்.

"நடையிலேயே வருவது யார்னு கண்டு பிடிச்சுட்டீங்க" என்றார் அருள்ராஜ்.

"அது மட்டுமில்லே அருள்! நீ ஏதோ துக்கத்தைச் சுமந்துக்கிட்டு வரேங்கிறதையும் அந்த நடையிலிருந்தே புரிஞ்சுக்கிட்டேன். கமான், டெல் மி வாட் இஸ் தி மேட்டர்?" என்று கேட்டவாறே ஃபைலில் கையெழுத்திட்டு மூடி 'அவுட்' டிரேயில் போட்டார் வைத்தியலிங்கம்.

"நம்ம நிறுவனத்தில் தொழிலாளர் யூனியன் காரியதரிசியா இருந்தேனில்லையா? அந்தப்பதவியை ராஜினாமாபண்ணிட்டேன்!"

"ஏன், ஏன்? என்ன நடந்தது?" என்று பரபரப்புடன் கேட்டார் வைத்தியலிங்கம்.

"அது உண்மைதான் ஸார். ஆனால் காலம் மாறிக்கிட்டு வரது. அரசியல் கட்சிகள் எல்லாத் தொழிற் சங்கங்கள் மீதும் செல்வாக்குப் பெற விரும்புகின்றன. அந்தத் தலைவர்கள் ஏதேதோ சொல்லி ஆசை காட்டறாங்க. தொழிலாளர்களும் அந்த ஆசைக்கு அடிமையாகிறாங்க. நம்ம நிறுவனத்தில் தொழிற்சங்கம் இதுவரை அரசியல் சார்பற்றதாய் இருந்தது. இப்போ வைரவன் மறைந்த பிறகு நிலைமை மாறிட்டது. அரசியல் சார்புள்ளதாக நம் சங்கம் மாறுவதை நான் விரும்பலே. ராஜினாமா பண்ணிட்டேன்."

வைத்தியலிங்கம் தமது கரங்களுக்கிடையில் ஒரு பென்சிலைப் பற்றிச் சுழற்றியபடியே சற்று நேரம் யோசித்தார். பிறகு, "நீ செய்தது சரியில்லே அருள். நாம் விரும்பியோ விரும்பாமலோ காலப்போக்குக்கு ஏற்பச் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன. சில மாறுதல்கள் நமக்குப் பிடிக்கவில்லை என்றாலும் அதைத் தவிர்க்க முடியாதபோது, சந்திக்கத் துணிய வேண்டும். எதுவும் ஒரு வரம்பு மீறிவிடாதபடி நம்மால் இயன்ற அளவுக்குப் பாதுகாக்க முயலணும்" என்றார்.

"ஸார்! நான் ராஜினாமா செய்தது உங்களை மகிழ்விக்கும் என்று நினைத்தேன்."

"அருள்! நீ என் மீதுள்ள விசுவாசத்தால் இப்படி நடந்துகொண்டாய். அது எனக்குப் புரிகிறது. இன்னொரு பக்கம், அரசியல் கட்சிகளும் தலைவர்களும் சொந்தச் செல்வாக்கை வளர்த்துக் கொள்ளத் தொழிலாளர்களைப் பகடைகளாகப் பயன்படுத்துகிறார்கள் என்று நீ நினைக்கிறாய். அது உனக்குப் பிடிக்கவில்லை. அதனால் இந்த யூனியன் விவகாரமே வேண்டாம் என்று ராஜினாமா செய்து விட்டாய். ஆனால் உன் ராஜினாமாவால் பிரச்னை தீர்ந்து விடப் போவதில்லை. இதற்கு மாறாக நீ தொழிலாளர் கூடவே இருந்து அவர்களுக்கு நல்லது கெட்டதை எடுத்துச் சொல்லி இருக்கலாம். அரசியல் சார்புகளை யூனியன் தலைவர்கள் யோசனைகளை எந்த அளவுக்கு ஏற்கலாம்; எந்த வரம்பை மீறிப்போனால் அது தொழிலாளர் நலனுக்கே குந்தகமாக முடியும் என்கிறதை நீ அவ்வப்போது அவர்களுக்கு விளக்கியிருக்கலாம். ஆனால் பகுத்தறிந்து பார்க்கும் திறனுடைய நீ இந்த வம்பே வேண்டாம் என்று ஒதுங்கி வந்து விட்டதால் என்ன பயன்? தொழிலாளர் அரசியல்



வாதிகளின் பசப்பு வார்த்தைகளில் முழுசாக மயங்கிடுவாங்க. நம்ம நிறுவனத்தின் தொழிலாளருக்கு உன் சேவை முன்னிலும் அதிகமாகத் தேவைப்படும்போது நீ பொறுப்பைத் தட்டிக் கழிச்சுட்டு வந்துட்டியே, அருள்!''

''ஐ ஆம் ஸாரி ஸார்!'' என்றார் அருள் ராஜ் மெய்யான வருத்தத்தோடு.

''டோண்ட் பி ஸாரி'' என்றார் வைத்தியலிங்கம். ''நடந்தது நடந்து போச்சு. இனிமேலே ஆகவேண்டியதைப் பார்க்கணுமே தவிர, வருத்தப்பட்டுப் பிரயோ ஜனமில்லே.''

''எஸ் ஸார்!''

''தொழிற்சங்கங்கள் அரசியல் சார்புள்ளவையாக மாறும்போது பெரிய குறைபாடு என்ன தெரியுமா அருள்?''

''என்ன ஸார்?''

''வெளி மனிதர் ஒருவருடைய தலைமையை இவர்கள் ஏற்பதுதான். அவர் தொழிலாளர் நலனுக்காகத் தாம் பாடுபடுவதாகச் சொல்கிறார். ஆனால் அதே நேரத்தில் தன் நலனையும் கட்சி நலனையும் கருதாமல் அவரால் இருக்க முடியாது. தொழிலாளர் உரிமைகளுக்காக அவர் போராடுகிறார். ஆனால் அதே அளவு வேகத்தோடு தொழிலாளர்களின் கடமைகளை அவர் உணர்த்துவதில்லை.''

''ஏன் ஸார், ஜப்பானிலே வேலைநிறுத்தம்னு சும்மா ஒரு கறுப்பு பாட்ஜை அணிந்து கொண்டு தொடர்ந்து வேலை செய்வார்களாமே, வாஸ்தவமா?''

''அது மட்டுமில்லே. சிலசமயம் முன்னிலும் அதிகமாக உழைத்து உற்பத்தியைப் பெருக்கிக் காட்டுவாங்க. எங்கள் கோரிக்கைகளை நீங்கள் ஏற்றுக் கொண்டால் எங்கள் ஆற்றல் அதிகரிக்கக் காண்பீர்கள் என்று முதலாளிக்கு உணர்த்துவார்கள்.''

''ஆச்சர்யமாயிருக்கு ஸார்!'' என்றார் அருள்ராஜ்.

''இதற்கும் முதலாளி மசியலேன்னு சம்பளம் வாங்கிக் கொள்ளாமலேயே வேலை செய்து அவரைத் தலைகுனிய வைப்பார்கள்!''

''இப்படியெல்லாம் தொழிலாளர்கள் நடந்துகொள்வதாலேதான் ஸார், அந்த நாடு பொருளாதார வளர்ச்சியிலே அமெரிக்காவையும் தோற்கடித்து விட்டது!''

''இதற்கு மறுபுறமும் உண்டு அருள்! ஜப்பானிய முதலாளிகள் தொழிலாளிக்குப் பொறாமை உண்டாகும்படி எந்தக் காரியமும் செய்ய மாட்டார்கள். மத்தியானம் எந்தக் காண்டீனில் தொழிலாளர் உணவு அருந்துகிறார்களோ அங்கேயே அவர்களுடன் சேர்ந்து முதலாளிகளும் சாப்பிடுவார்கள். கார் ஒன்று வீட்டில் இருந்தாலும் பஸ்ஸிலோ அல்லது ரயிலிலோதான் காரியாலயத்துக்கு வருவார்கள். பெரிய பங்களா வாங்க வசதி இருந்தாலும் சிறிய ஃப்ளாட்டில்தான் வாழ்வார்கள். இந்த அடக்கம் அவர்களுக்குத் தொழிலாளர்களிடையே அன்பையும் மதிப்பையும் பெற்றுத் தருகிறது. சிக்கனத்தைக் கடைப்பிடிக்கும் முதலாளி, தாம் அடையும் லாபத்தையெல்லாம் மீண்டும் தொழில் விஸ்தரிப்பிலோ அல்லது புதிய தொழிலகங்களைத் தொடங்குவதிலோதான் செலவழிக்கிறார் என்று தொழிலாளி உணர்கிறான். தன்னைப் போன்ற வேறு பலருக்கு வேலை வாய்ப்புக்கள் அதிகரிப்பதை அறிகிறான். இங்கே நம் நாட்டிலே என்னடா வென்றால்'' என்று வைத்தியலிங்கம் வாக்கியத்தை முடிக்காமல் இருக்க அருள்ராஜ் தொடர்ந்தார்:

''கம்பெனி லாபகரமாக நடந்தவரை ரயில் பயணம் செய்த நிர்வாகி, நஷ்டமடையத் தொடங்கியதும் விமானத்தில் பறக்கிறார். கேட்டால் டைம் ஸேவ் பண்ணி புரொடக்டிவிடியை அதிகரிக்கிறாராம்!''

வைத்தியலிங்கம் புன்னகையுடன், ''நல்லவேளை பிளேனையே வாடகைக்கு எடுக்காமல் ரெகுலர் ஃப்ளைட்டில் பறக்கிறானே, அந்த மட்டும் தேசம் அவனுக்கு நன்றி செலுத்தணும்'' என்றார். இருவரும் தம்மை மறந்து சிரித்தனர். ஆனால் அந்தச் சிரிப்பை இடை வெட்டுவதுபோல் வெளியே கோஷங்கள் எழுந்தன: ''துரோகி அருள்ராஜ் — ஒழிக! அடிவருடி அருள்ராஜ் — ஒழிக! புதுக் காரிய தரிசி புகழேந்தி — வாழ்க! வண்ணக் கொடி வெல்க! தலைவர் கானமேகம் — வாழ்க முதலாளித்துவம் — வீழ்க, தொழிலாளர் நலன் — வெல்க!''



பம்பாயில் ஜெகஜீவன் ராமை கார்ட்டூனிஸ்ட் லக்ஷ்மணன் சந்தித்தார். இந்தப் படத்தை 5 நிமிடத்தில் வரைந்து அவர் கையெழுத்தையும் வாங்கினார்.

—கரண்ட்.

—பாபு.

இதைச் செவியுற்ற அருள்ராஜ், ''இருபது வருஷமா இதுமாதிரி கோஷம் எதையுமே நம் தொழிலகத்தின் வாசலில் எழவிட்டதில்லை ஸார் நான்'' என்றார். அவர் குரல் தழுதழுத்தது.

''அது கோஷம் மட்டுமில்லே அருள்ராஜ்! உன் அசட்டுத்தனத்தின் எதிரொலியும்கூட!'' என்று வைத்தியலிங்கம் கூறியபோதிலும் அவர் குரலில் கோபம் தொனிக்கவில்லை; வருத்தமே மேலோங்கியிருந்தது. அருள் ராஜ் வெட்கித் தலைகுனிந்தார். (தொடரும்)

# 7iffi



X பிரான்க - புஸிவிட் கர்ல்

● குவெய்த் நாட்டுப் படமான 'வெட்டிங் ஆஃப் ஜூனி'ல், டைரக்டர் நிறைய உத்திகளைத் திணித்திருந்தார். காமிரா பிரமாதம். இருந்தாலும் டெம்போ இல்லாத காரணத்தாலும் கதை சுமாராக இருந்ததாலும் போர் அடித்தது.

● வழக்கமாக ரஷ்யப் படங்கள் என்றால் ராணுவ வீரன் அல்லது டிராக்டர் அல்லது இரண்டும் இருக்கும். இந்தத் தடவை விழாவில், 5, 6 ரஷ்யப் படங்கள் இடம் பெற்றிருந்தன. காதல், நகைச்சுவை மசாலா இருந்தது மகிழ்ச்சியான மாற்றம்.

● எகிப்து படம் 'எ வோர்ல்ட் ஆஃப் சில்ட்ரன்' முழுக்க முழுக்கச் சிரிப்புப்படம். நடிப்பு, வசனம், கலர் படப்பிடிப்பு எல்லாம் ரசிக்கும்படி இருந்தன — டைட்டில் இசையை அப்படியே தமிழ்ப்படத்தில் அல்லது இந்திப்படத்தில் யாராவது எடுத்து உபயோகிக்கக்கூடும். ஆறு குழந்தைகளும் ஒரு இரட்டைக் குழந்தைகளும் உடைய ஒருவர் (மனைவியை இழந்தவர்) ஆறு குழந்தைகளை உடைய ஒரு பெண்மணியை (கணவனை இழந்தவர்) திருமணம் செய்து கொள்ளுகிறார். கேட்க வேண்டுமா வேடிக்கையை. இந்த 14 குழந்தைகள் குடும்பத்திற்கு இரண்டு புதிய நபர் வருகின்றனர். அவர்கள்: புதிதாகப் பிறக்கும் இரட்டைக் குழந்தைகள்!

● ஹிட்ச்காக் முன்பு எடுத்திருந்த '39 ஸ்டெப்ஸ்' என்ற படம், இரண்டாம் முறையாக எடுக்கப்பட்டு இருக்கிறது, இப்போது. இந்தப் படத்தைப் பின்பற்றி இந்தியில் ஒரு படம் எடுக்கப்போகிறார் பாசு சாட்டர்ஜி. அவரே கூறிய தகவல் இது.

● தங்கமயில் பரிசு பெற்ற 'ஹங்கேரியன்ஸ்' புகழ் பெற்ற ஜோல்டன் ஃபாப்ரி டைரக்ட் செய்தது. இரண்டாவது உலகப் போர்ப் பின்னணியில் எடுக்கப்பட்ட படம். ஜெர்மனியில் வேலை தேடிச் சென்ற ஹங்கேரி விவசாயிகளைப்



X லைவான்ஞு ஸ்மித்

# சர்வதேசத் திரைப்பட விழா

பற்றிய மனத்தைத் தொடும், பலசமயம் உலுக்கும், படம்.

● வெள்ளி மயில் பரிசு பெற்ற அமெரிக்க நடிகை லவான்னு ஸ்மித் ''ஃபைவ் டேய்ஸ் ஃப்ரம் ஹோம்'' என்ற படத்தில் சிறப்பாக நடித்தார். சிறையிலிருந்து தப்பிய கைதி இவன் ஓட்டிச்செல்லும் காரில் ஏறி, துப்பாக்கி முனையில் காரை ஓட்டச் செய்கிறார். சாகும் தறுவாயிலிருக்கும் தன் பையனைப் பார்க்கும் வேகம் அந்தக் கைதிக்கு. கார் ஓட்டும் பெண்மணி முதலில் நடுங்கிக் குமுறித் தத்தளித்தாலும் பின்னால் அவனுக்கு உடந்தையாக ஆகி விடுகிறாள். லவான்னுவின் இயற்கையான நடிப்பு பரிசுக்குரியது தான்.

● 'ஃபெடோராவை டைரக்ட் செய்த பில்லி வைல்டருக்குச் சிறந்த டைரக்டர் பரிசாக வெள்ளிமயில் தரப்பட்டது. ஃபெடோரா முழுக்க முழுக்கப் பொழுது போக்குப் படம். ரிடையராகி விட்ட ஒரு சினிமா நடிகையைப் பற்றிய கதை. பட விழாவில் இதைவிட அபாரமாக டைரக்ட் செய்யப்பட்ட படங்கள் இருந்தன.

● 'அடுத்த ஆண்டு 'பிலிமோத்ஸவ் –80' நடைபெறும். ஆனால் டில்லியில் அல்ல'' என்று அறிவித்தார் அமைச்சர் அத்வானி.

கமலா ரங்கநாதன்.

X அங்கேரி - அடாப்ஷன்.



யு எஸ் ஏ: அன்மேரிட் வுமன்

யு எஸ் ஏ - இலவிகல்





# அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்

## ஆறுதல் பரிசு பெற்றவர்கள்

1. எஸ். கிருஷ்ணமூர்த்தி — சித்தமல்லி, கோயமுத்தூர். 2. சரவணபவன்—கிருஷ்ண கிரி. 3. கே. ராகவன் சென்னை—53. 4. எஸ். புருஷோத்தமன்—பெங்களூர். 5. இ. கணபதி — அருப்புக்கோட்டை. 6. இந்து மதி — சென்னை—34. 7. விசாலாட்சி பால சுப்பிரமணியன் — ஆடுதுறை. 8. சி. பால சுப்பிரமணியம் — பாண்டிச்சேரி. 9. வி. பாலாஜி — சென்னை—4. 10. ச. பாலசந் திரன் — சென்னை—3. 11. எஸ். சிங்கார வேல்ன் — தென்காசி. 12. க. ராஜேசு வரி — நெல்லிக்குப்பம். 13. எஸ். சாந்தி— பண்ருட்டி. 14. வி. தினகரன் — விழுப் புரம். 15. வி. சுகுமார் — பண்ருட்டி. 16. ஆர். நளினி — பெங்களூர். 17. ஜே. சுகுமார்—நெல்லிக்குப்பம். 18. கே. ராஜு— பவானி. 19. எஸ். ரமேஷ் — மாயூரம். 20. ஏ. ஆர். குழந்தைவேலு — பொழுல். 21. எஸ். ராகவன்—சென்னை—10. 22. வி. ஜெயராமன் — காவேரிப்பட்டினம். 23. ஆர். கோபாலகிருஷ்ணன்—சிதம்பரம். 24. எஸ். கணேசன். — மாயூரம். 25. வி. சீட்டா— தரங்கம்பாடி. 26. டாக்டர் எஸ். ரங்க நாதன் — மதுரை. 27. ருக்மிணிகிருஷ்ணன்— திருப்பூர். 28. எஸ். கஸ்தூரிபாய் பிரபு— சென்னை—21 29. பி. கருணாகரன் — சென்னை—1. 30. தனலட்சுமி ஆனந்தன் — சென்னை—14 31. பி.ஸ்ரீதரன்—சென்னை-49. 32. பி. அ. பாரத்குமார் — சென்னை—11. 33. எச். பி. பிரேம்நசீர் — கன்னியாகுமரி. 34. வி. மோகன் — ஐயங்கார்குளம். 35. எஸ். பாஸ்கரன் — சென்னை—2. 36. ஸ்ரீமதி வசந்தா சுப்பிரமணியம் — சென்னை—78. 37. கே. சுப்பிரமணியன் — குன்றத்தூர். 38. எஸ். ராஜேசுவரி — தஞ்சாவூர். 39. வி. ஆர். முரளீதரன்பிள்ளை—நெய்வேலி. 40. எம். வெங் கடராமன் — கல்பாக்கம். 41. எஸ். ஆர். மாணிக்கம்—இச்சிப்பாளையம். 42. கோ. சீனி வாசன்—மதுரை. 43. ஆர். கங்காதரன்.— புதுதில்லி. 44. எஸ். துளசி பாய் — மதுரை—1. 45. நா. ம. ப. பூர்ணிமா. — மதுரை—1. 46. எம். கோவிந்தராஜன் — திருப்பூர். 47. டி. கைலாசனு — திருச்சி—1. 48. க. சண்முகநாதன் — தேவகோட்டை. 49. டி. கல்யாணராமன் — உல்சூர், பெங்க ளூர். 50. பி. வெங்கடாசலம் — பெங்க ளூர்—42. 51. ஜி. தியாகராஜன்—ராஜாஜி நகர் பெங்களூர். 52. டி. தையநாயகி — திருப்பாப்புலியூர். 53. மாலி — மாயூரம். 54. பி. தனலக்ஷ்மி — மதுரை—16. 55. கே. ராமச்சந்திரன் — திருவையாறு. 56. அ. பழனியப்பன் — மணப்பாறை. 57. வெ. செந்தாமரை. — சென்னை—81. 58. ஸ்ரீமதி சரோஜா ராஜாங்கம் — சென்னை—21. 59. பேபி கிருஷ்ணவேணி — மேட்டுப்பாளையம். 60. வி. சகுந்தலா — கிராமசேவிகா. காவேரிப்பட்டினம். 61. ஆர். பிரபாவதி— பாப்பாநாயக்கன் புதூர்: 62. என். வேங் கடாசலம்—வையம்பாளையம். 63. வி. எஸ். சண்முகம் — வடக்கலூர். 64. வேம்பு — அன காபுத்தூர். 65. மா. இ. நந்தகோபால் — சென்னை—56. 66. சாவித்திரி வைத்திய நாதன் — சென்னை—84. 67. தீ. பாண்டியன் — வண்டிப்பாளையம். 68. கே. சண்முகம்— கடலூர் ஜங்ஷன். 69. பி. சகுந்தலா — சேலம்—1. 70. டாக்டர் ரெஜினால்ட் ஜான்— கோவை—2. 71. கே. குபேரன்—சென்னை—21. 72. எஸ். சீனிவாசன் — வேடசந்தூர் 73. ஏ. எஸ். ராஜசேகரன் — திண்டுக்கல். 74. ஸ்ரீமதி கண்ணு வரதராஜன்—பெங்களூர்—55. 75. டி. பாலசுப்பிரமணியம் — திருப்பூர். 76. எஸ். சுகந்தா — சேலம்—1. 77. மிஸ் பி. மதுரம் — தஞ்சாவூர். 78. எம். ராஜ மாணிக்கம் — புளிமங்கலம். 79. ஆர். ஜெக தீசன் — சத்தியமங்கலம். 80. கே. எஸ். நாராயணன் — ஈரோடு. 81. எம். ராம ரத்னம் — சென்னை—61. 82. எஸ். ராகவன் —புதுதில்லி. 83. ஆர். சிவம்—நீலம்பூர். 84. பி. சேகர் — ஆரணி. 85. ச. பி. ரவி — உடுமலைப்பேட்டை. 86. கு. சீனிவாசன் —புழல். 87. ஆர். சிவசேகரன்—சென்னை—78. 88. ஆர். சகுந்தலா — பம்பாய்—81. 89. ஜி. பாலகிருஷ்ணன் — புதுதில்லி. 90 என். மணி — பம்பாய்—77. 91. வை. பாலசுப்

பிரமணியன் — சென்னை-4. 92. வெ.லோக நாதன் — பெங்களூர்-23. 93. வி. ஆர். ஹேமா சிவபிரகாஷ் — உல்சூர், பெங்களூர். 94. எம். கே. முருகேசன் — மைசூர்-4. 95. சாவித்திரி அம்மாள் — சென்னை-4. 96. ஆர். லக்ஷ்மி — சென்னை-33. 97. எம். அண்ணாமலை — காரைக்குடி. 98. ஏ. அழகுசுந்தரம் — பழனி. 99. எஸ். ரமணி —மதுரை-10. 100. க. சங்கரன்—கொளை யூர், தோமல். 101. ஆர். வீரமணி — சென்னை-94. 102. தே. பிரமிளா — சென்னை-11. 103. சி. வி. அர்த்தநாரி — சென்னை-28. 104. வஜ்ரேசுவரி கோபண்ணு — நெல்லிக்குப்பம். 105. கே. சாதனா— புதுக்கோட்டை. 106. வி. குருபிரசாத் — புதுக்கோட்டை. 107. எஸ். தேவகுமாரி — புதுக்கோட்டை. 108. ம. இரத்தினம் — குளித்தலை. 109. பேபி. எஸ். ராமலட்சுமி — புதுக்கோட்டை. 110. எஸ். சுஜிலா, — புதுக்கோட்டை. 111. எம். மோகன் — பவானி. 112. எஸ். ஆறுமுகம் — ஏத்தாப்பூர். 113. ஏ. ஹேமலதா—சேலம்-6. 114. கே. மகாலக்ஷ்மி, — இஞ்சிக்கொல்லை. 115. டி. சுப்பிரமணிய பிள்ளை — நாகர்கோயில். 116. எஸ். ரத்னா, நாகர்கோயில் 117. எம். லக்ஷ்மி — காமய கவுண்டன் பட்டி. 118. எஸ். ஜெயலக்ஷ்மி — கம்பம். 119. வி. பிரதாபன் — கம்பம். 120. என். முருகேசன் — பரோடா. 121. ஏ. மூவேந்தன்—திருப்பூர்-3. 122. ஆர். ரங்கராஜன்—திருப்பூர். 123. ஏ. பரிமளாதேவி— திருப்பூர். 124. சி. சுப்ரமணியம்—அனுப்பர்பாளையம். 125. கோ. தண்டபாணி — அனுப்பர்பாளையம். 126. டி. கே. பழனிபாபு — திருப்பூர்-4. 127. எம். ஜி. முகமது இக்பால்—கோவை-3. 128. கே. குமரேசன் — அனுப்பர்பாளையம். 129. ஏ. லியாகத் அலி — அவிநாசி. 130. ராமசாமி — தொங்கிட்டி பாளையம், 131. இ. வரதராஜன் —ராக்கியா பாளையம். 132. பி. சம்பந்தம்— காஞ்சிபுரம். 133. க. சித்திரா, — குரோம்பேட்டை. 134. ஏ. தொண்டிராஜ் — சென்னை-44. 135. எஸ். ரகுநாதன் — சென்னை-61. 136. பி. ஜெயந்தி — சென்னை — 44. 137. எஸ். மோகன் — தஞ்சை-6. 138. எஸ். குமார்—சென்னை-5 139. புலவர். சி. கேசவன் — பாபநாசம். 140. எஸ். ஜெயராமன் — ராமனுதபுரம். 141. ஜி. ஆர். நவகோடி — கோவை-6. 142. எஸ். நடராஜன் — அண்ணாமலைநகர். 143. ந. இராக — மேட்டூர் அணை. 144. ஜி. குஞ்சிதபாதம் — திருவாரூர்-8. 145. எஸ். மோகன்—கைச்சினம். 146. கே. ராஜாராமன் — பாண்டிச்சேரி. 147. ஏ. நர்மதா—புதுப்பத்தூர். 148. கவிலா சாரி —சேலம்-5. 149. ஞானகிராகவன்—மேட்டூர் அணை. 150. இந்திராணி ஜெயசந்திரன் — சேலம்-8. 151. டி. கிருஷ்ணமூர்த்தி — ராசிபுரம். 152. ஆர். சவுண்டப்பன் — ஜலகண்டபுரம். 153. ராஜம்மாள் — சென்னை-28. 154. டி. முத்துசாமி — புது தில்லி-49. 155. பி. ராஜகோபாலன் — திருவான்மியூர். 156. டி. ருக்மிணி தேவி— சென்னை-33. 157. லலிதாமூர்த்தி — சென்னை-18. 185. பவானிரமணி, சென்னை-86. 159. ஜ. சுயாம்பு — சென்னை-18. 160. இந்திரா—சென்னை-1. 161. ஆர். எஸ். வெங்கட்ராமன் — பெங்களூர். 162. ஆர். ராமரத்தினம் — சென்னை-15. 163. டி. கோதண்டபாணி— சென்னை-4. 164. லலிதாமூர்த்தி — ஆமதாபாத். 165. கிரிஜாராமன்—பெங்களூர்-5. 166. சி. சண்முகமணி—கோவை12. 167. சி. விஜயலக்ஷ்மி — கடலூர். 168. எஸ். பிரபு கணேஷ் —கடலூர். 169. கோ. வி. க்ஷமா — கடலூர். 170. வ கன்னியப்பன்— சுபாஉப்பலவாடி. 171. எஸ். மல்லாரி — கடலூர். 172. எம். சுவாமிநாதன் — கடலூர். 173. வி. ஜெயந்தி — ஸ்ரீமுஷ்ணம். 174. ஆர். ரவிகுமார் — கும்பகோணம். 175. விஜயலக்ஷ்மி. — மதுரை-16. 176. யசோதா — அப்பன் திருப்பதி. 177. வி. எஸ். பாலசுப்பிரமணியன்—மதுரை. 178. ஜி. ராமனுதன் — திருச்சி-8. 179. எம். சங்கர் — மேலச்சிவல். 180. ஏ. முகமது— ஜபருல்லாகான்—விருதுநகர். 181. ஏ. மாரியப்பன்—விருதுநகர். 182. எம். கே. இராக— மேட்டுப்பாளையம். 183. பி. கணேசன் — காங்கயம். 184. கே. சிவகாமி—கண்ணன் குறிச்சி. 185. எம். மூர்ச்சிசங்கர்—சேலம்-7. 186. வி. ஸ்வர்ணலதா—சேலம்-1. 187. எஸ். சத்தியவதி—சேலம்-1. 188. ச. இராமநாதன் — வேம்படிதளம். 189. கா. அப்துல்நபி—சேந்தமங்கலம். 190. மு. பொன்னுச்சாமி— அரிசிபாளையம். 191. திலகம் ராமசாமி — சஞ்சீவிராயன்பேட்டை. 192. எஸ். ரத்தினம்—திருவாலைக்கோயில். 193. ஜி. குமாரராஜா — சென்னை-40. 194. செ. மா. செல்வி — வெளிப்பாளையம். 195. ஜெ. ஜோசப் கென்னடி — சென்னை-24. 196. எஸ். கிரிஜா — கரூர். 197. கே. ரங்கராஜன் — மதுரை-16. 198. ஆர். பத்மநாபன் — சேலம்-1. 199. ஆர். வைகுண்டராமன்—நாமக்கல். 200. பெ. ர. நஞ்சுண்டன் — கோத்தகிரி.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மகள் : அம்மா! அப்பா எனக்கு சிலேட்டில் ஒரு கணக்குப் போட்டிருக்கிறார். அதை எப்படிச் செய்யறதுன்னு தெரியலே!"

நடிகை : கணக்கை வாசி நான் சொல்லித் தரேன்!.

மகள் : உன் அம்மாவின் உண்மையான வயது 45: அவள் சொல்றே வயது 25. அப்படியானால் அவள் குறைத்துக் காட்டும் வயது எத்தனை?"

உ. ராஜாஜி



தென்னிந்திய ஃபிலிம் வர்த்தக சபைத் தலைவர் சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்தேன். ''ஹலோ'' என்று வரவேற்றார். ''கேள்வி கேட்கலாமா?'' என்றதற்கு ''உங்கள் விருப்பம்'' என்றார். இப்படி அவர் சொன்னவுடன் அவருடைய படம்தான் என் நினைவுக்கு வந்தது. அவர் எடுத்த ஒரு படத்தின் பெயரும் ''உங்கள் விருப்பம்'' தான். ''ஹலோ பார்ட்னர்,, ''தேன் கிண்ணம்'', ''உங்கள் வீட்டுக் கல்யாணம்'' ஆகியவையும் அவர் எடுத்தவையே.

தயாரிப்பாளர் கிருஷ்ணமூர்த்தி தமது நகைச்சுவைப் படங்களைத் தயாரிக்கும்போது ஏற்பட்ட ரசமான சம்பவங்களை விவரித்தார்:

''சிறு வயது முதலே எனக்கு ஹாஸ்யத் துணுக்குகள் மீதும் அதற்காகவே வெளிவரும் காமிக் புத்தகங்கள் மீதும் அளவு கடந்த ஆசை. லாரல் ஹார்டி படங்களைப் பார்த்த நான், 'அந்த மாதிரி தமிழ்ப் படங்களும் ஏன் எடுக்கக் கூடாது?' என்று நினைக்க ஆரம்பித்தேன். இந்த ஆசையே பின்னால் என்னை முழுநேரத் திரைப்படத் தயாரிப்பாளனுக்கியது என்று கூறலாம்.

'' 'தேன் கிண்ணம்' படத்தில் ஒரு காட்சி. நாகேஷ் புலிவேஷம் போட்டு ஆட வேண்டும்: மேக்கப் (புலிவேஷ மேக்கப்) எல்லாம் முடிந்து நாகேஷ் செட்டுக்குள் வந்து உட்கார்ந்தார். அவருக்குப் புலிவேஷ நடனம் கற்றுத் தருவதற்காகவே புலிவேஷம் போட்டு நடனமாடும் ஒருவரை அழைத்து வந்திருந்தோம். அவர் நாகேஷுக்குச் சொல்லிக் கொடுத்தார். நாகேஷும் அப்படியே செய்தார். ஆனால் ஏனோ அது நாகேஷ் உள்பட யாருக்குமே திருப்தியாக அமையவில்லை. என்னிடம் வந்தார் நாகேஷ். 'சார்! இந்த நடனத்தை என்னிடம் விட்டு விடுங்கள். என் இஷ்டப்படி செய்கிறேன்' என்றார். நானும் 'சரி' என்றேன். சொல்லிக் கொடுத்து நடனமாடியதில் புலி நடனம் மட்டும்தான் இருந்தது. ஆனால் நாகேஷ் சொந்தமாக ஆடியதன் விளைவு அதில், அவருடைய தனித் தன்மையுடன் கூடிய நகைச்சுவையும் இணைந்தது. படம் ரிலீஸ் ஆனதும் அந்த நடனத்துக்கு ஏகோபித்த பாராட்டுதல்கள்.

''இந்த மாதிரி ஓரிரு நிமிஷங்களில் மிக முக்கியமான முடிவுகள் பலசமயம் எடுக்கப்படும். ''கல்யாணமாம் கல்யாணம்'' படத்தின் ஆரம்ப நாள் வரை நடிகை லதா இரு சகோதரிகளில் ஒருத்தியாகவும் ஜெயசித்ரா மற்றொரு சகோதரியாகவும் நடிப்ப





'உங்கள் விருப்பம்' படத்தில் ஜெய்சங்கர், ஜெயசித்ரா.

# திடீர் ஆசைகள்; படீர் சிரிப்புகள்!

'சித்ரமகால்' கிருஷ்ணமூர்த்தி

தாக இருந்தது. நாங்கள் எல்லோரும் படப்பிடிப்புக்காகச் சேலத்துக்குச் சென்றுவிட்டோம். திடீரென்று ஃபோன்மூலம் லதா நாளைப் படப்பிடிப்புக்கு வரமுடியாது என்று செய்தி தெரிவிக்கப்பட்டது. முதல்நாள் இரவு கிடைத்தது இந்தச் செய்தி. மறுநாள் காலை பூஜை. நடிகர் ஜெய்சங்கர் உட்பட எல்லோருமே அதிர்ச்சி அடைந்து விட்டார்கள். 'என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று வினவினார்கள். நான் பூஜை நேரம் வரை மௌனமாகத்தானிருந்தேன். பூஜை நேரத்தில், 'ஜெயசித்ரா இரு வேடங்களில் நடிக்கப் போகிறார்!' என்று தெரிவித்தேன். சத்தமில்லாமல் சிரித்தவர்கள் பலர். என்னிடம் சொல்லிவிட்டுச் சிரித்தவர்கள் சிலர். ஆனால் நானும் சிரித்தேன். எப்பொழுது தெரியுமா? படம் நூறு நாட்கள் ஓடிய பிறகு. அன்று சிரித்தவர்களைப் பார்த்துச் சிரித்தேன்.

''சில திடீர் ஆசைகள் எனக்கு ஏற்படுவதுண்டு. ''உங்கள் விருப்பம்'', படத்தில் ஜெய்சங்கரும், தேங்காய் சீனிவாசனும் மாறுவேடத்தில் வருவதாகக் காட்சி. ஜெய்சங்கருக்கு முஸ்லீம் வேடத்தைப் போட்டு விட்டார்கள். தேங்காய் சீனிவாசனுக்கு என்ன வேடம் போடுவது? என்று பலமான சிந்தனை. அப்பொழுது, 'பெண் வேடம் போடலாமே' என்றேன் நான். அதற்கு எல்லாப் பக்கங்களிலிருந்தும் எதிர்ப்புக்கள். ஒருவர், 'இந்த உயரத்தில் பெண் இருக்கமாட்டாள்' என்றார். இந்த எதிர்ப்புக்களை எல்லாம் பொருட்படுத்தாமல் தேங்காய் சீனிவாசனைப் பெண் வேடம் போடச் செய்தேன். அந்தப் படத்தில்தான் முதன் முதலாகத் தேங்காய் சீனிவாசன் பெண் வேடம் போட்டது.

'' 'எம். ஆர். ஆர். வாசு தமது உடம்பை வைத்துக் கொண்டு இருபத்திரண்டு படிகளில் உருண்டு விழுந்தார்!' என்று நான் சொன்னால் நம்புவீர்களா? ஆனால் அது உண்மை. ''ஹலோ பார்ட்னர்'' படத்துக்காக மாடியிலிருந்து கீழே உருண்டு விழ வேண்டிய காட்சி. 'உங்களால் அப்படி உருள முடியாது. அதற்கு 'டூப்' போட்டுக் கொள்ளலாம்' என்றேன் சகஜமாக. 'நானே சரியாக விழுந்துவிட்டால் எனக்கு 100 ரூபாய் தருகிறீர்களா?' என்று வாசு என்னிடம் பந்தயம் வைத்தார். நானும் 'சரி' என்று தலையாட்டினேன். முதல் டேக்கின்போது மிகவும் கஷ்டப்பட்டுத் தத்ரூபமாக உருண்டார் வாசு. இது படத்துக்காக எடுக்கப்படும் காட்சி என்பது தெரியாமல் அவருடன் வரும் அவரது வேலைக்காரப் பையன் அவரைக் காப்பாற்றக் காட்சிக்குள் திடீரென்று பாய்ந்து விட்டான்! இதனால் இரண்டாவது டேக் எடுக்கும்படி ஆயிற்று. இரண்டாவது டேக் எடுக்கும்போது ஃபிலிம் ரோல் முடிந்து விட்டது! மூன்றாவது டேக்கில் தான் எல்லாமே சரியாக அமைந்தது. ஆகவே மூன்று முறை உருண்டார் வாசு!''

சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி தென்னிந்திய ஃபிலிம் வர்த்தகசபைத் தலைவராகவும் இருக்கிறார். அவரிடம், ''சென்சார் செய்யப்படும் தேதியை வாங்குவதற்கு முன்பாகவே சில தயாரிப்பாளர்கள் எப்படி ரிலீஸாகும் தேதியை வெளியிடுகிறார்கள்?'' என்று கேட்டேன்.

''அதுதான் ஸார், மிகப்பெரிய ஜோக்!'' என்றார் கிருஷ்ணமூர்த்தி. ''ஒரு பண்டிகை நாளன்று பத்திலிருந்து பன்னிரண்டு படங்கள்வரை வெளிவரப் போவதாக அறிவிப்புக்கள் வருகின்றன. ஆனால் அந்தக் குறிப்பிட்ட பண்டிகை நாள் வரை சென்சார் தேதியே நிர்ணயிக்கப்படவில்லை என்றால் படம் எப்படி வெளிவரும்?''

பேட்டி: **சலன்**

'தேன் கிண்ணம்' படத்தில்
வி. கே. ராமசாமி,
நாகேஷ்.



ஊருக்கு வெளிப்புறத்தில் புதிதாக அமைக்கப் பட்டிருந்த அந்தப் பொழுது போக்கு ஸ்தலத்தில் ஓரிடத்தில் தனியாக வந்து உட்கார்ந்த ஹேமாலாவுக்கு அப்போது அங்கு நிலவிய அமைதி பிடித்திருந்தது.

அவள் சட்டென்று எழுந்து ஆற்றோரமாகவே கொஞ்ச தூரம் நடந்து போய், ஓரிடத்தில் புதிதாக அமைக்கப்பட்டிருந்த மூங்கில் பாலத்தின் வழியாக அக்கரைக்குப் போனாள்.

அக்கரையில் — அந்த மூங்கில் பாலம் முடிகிற இடத்துக்கு அண்மையில் — சுற்றிலும் ஏராளமான இளம் விழுதுகளைப் பரப்பித் தொங்க விட்டுக் கொண்டு வானோக்கிச் செழித்து வளர்ந்திருந்த ஓர் ஆலமரத்தின் அடியில் போய் நின்று, அதன் விழுதுகளில் சிலவற்றை, ஒவ்வொன்றாக மெள்ள ஆட்டி விட்டாள் ஹேமாலா! ஒரே நேரத்தில் இந்த நூறு விழுதுகள் சேர்ந்தாற் போல் ஆடுவது அவளுக்கு வேடிக்கையாகவே இருந்தது. அதே நேரத்தில், தான் முதலில் ஆட்டிவிட்ட விழுது இப்போது ஓய்ந்து போவதையும், கடைசியாக ஆட்டிவிட்ட விழுது வேகமாக ஆடுவதையும் அவள் கூர்ந்து கவனிக்கவும் தவறவில்லை. அவ்விரு விழுதுகளின் ஓய்விலும் உற்சாகத்திலும் அவளுக்கு என்னவோ புரிவது போலவும் இருந்தது. அவ்வளவாக விவரிக்க முடியாத ஓர் உண்மையை — உணர்ந்து மட்டுமே புரிந்து கொள்ளக்கூடிய ஒரு மெய்ம்மையை — மிக இரகசியமாக அவளது புத்தி நிச்சயப்படுத்திக் கொள்வதாக அவளுக்குப் பட்டது.

ஆற்றின் மறுகரையில் — அவ்வாற்றங்கரை நடைபாதைக்கு அப்பால் நெடுஞ்சாலையில் — ஒரு காரின் விசித்திரமான 'ஹாரன்' ஒலி கேட்டது. 'சந்தேகமே இல்லை, அது, தேவராஜனுடைய காரின் ஹாரன் ஒலிதான்!' — ஹேமாலா நினைத்துக் கொண்டாள்.

தன் காரை விட்டிறங்கித் தேவராஜன் அவளை நெருங்கிக் கொண்டிருந்தான்.

ஊருக்கு ஒதுக்குப் புறமாக இருந்த சேரியொன்றில் பஞ்சவர்ண சாம்பானின் ஏக புத்திரியாகப் பிறந்தவள் ஹேமாலா! அவளது பிள்ளைமைப் பருவம், அந்தச் சேரியைச் சேர்ந்த குழந்தைகள் எல்லோருடனும் பழகுவதில்தான் கழிந்தது. அவர்களைப் போலவே அவளும் அந்தச் சேரியின் புழுதித் தரையிலும், குப்பை கூளங்களிலும், ஓடியாடியும், விழுந்து புரண்டுந்தான் பொழுதுகளைக் கழித்தாள். ஒரேயொரு வித்தியாசம். அவள் மட்டும் ஊருக்குள் சென்று நகராட்சித் தொடக்கப் பள்ளியில் கடைசி வரை படித்தாள். பின்னர் ஹைஸ்கூலிலும் சேர்ந்தாள்.

அவள் ஹைஸ்கூலில் சேர்ந்த போதுதான், 'சின்ன பாப்பா' என்ற அவளது பெயர் ஹேமாலா' என்று மாற்றப்பட்டது. அவள் பெயர் மாறியது முதலில் அவளுடைய பெற்றோர்களுக்குக் கூடத் தெரியாது. பிறகுதான் அவர்களும் அதைத் தெரிந்துகொண்டனர்.

அவளை ஹைஸ்கூலில் சேர்த்தவளும், அப்போது அவள் பெயரை மாற்றியவளும் வேறு யாரும் அல்ல, அவளுடைய தொடக்கப்பள்ளி ஆசிரியை ஒருத்தியே!

ஹேமாலாவின் தந்தை உள்ளூர் இராமலிங்கனார் பண்ணையில் வேலை செய்து வந்தான். அவனுடைய மனைவியும் காலைமாலை வேளைகளில் அதே பண்ணைக்குச் சென்று

# விருட்சம்

## காடவன்

மாட்டுத் தொழுவங்களைக் கவனிப்பது போன்ற துப்புரவு வேலைகளைச் செய்து வந்தாள். ஹேமாலா இப்போது ஹைஸ்கூல் படிப்பையும் முடித்து விட்டாள்.

ஒருநாள் எஸ். எஸ். எல். சி. சர்டிபிகேட் வாங்கப் பள்ளிக்குப் போனாள் ஹேமாலா. அச்சமயம், அந்தப் பள்ளியின் தலைமையாசிரியர் அவளையழைத்து, ஹரிஜனங்களுக்காக அரசாங்கம் அறிவித்துள்ள சலுகைகளைப் பற்றியெல்லாம் எடுத்துரைத்து, அவளையும் கல்லூரியில் சேர்ந்து படிக்குமாறு தூண்டியதுடன் அந்தச் சலுகைகளைத் தாமே முயன்று பெற்றுத் தருவதாகவும் கூறினார்.

அவள் கல்லூரியில் இறுதியாண்டுப் படிக்கையில் அவள் தந்தை தள்ளாமை அதிகப் பட்டதால் பண்ணை வேலைகளுக்குப் போவதை நிறுத்திக்கொண்டார்.

தம் குடும்பத்துக்கிருந்த பூர்வீகச் சொத்தான நாலுமா, நன்செய்நிலத்தையும் கூலியாட்களை வைத்துக் கொண்டு உழுது பயிரிட்டு வந்தார்.

அவள் தன் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டவுடன், முதன் முதலாக, முன்பு தான் கல்வி பயின்ற பள்ளிக் கூடத்தின் தலைமையாசிரியரைச் சந்தித்து ஆசிகள் பெற அவர் வீட்டிற்குச் சென்றாள். அவர் கனிவான குரலில், ''ஹேமாலா! மற்றவர்களைப் போல நீயும் ஒரு வேலை தேடிப் போனால் நான் எவ்

786...
தஞ்சை ஜில்லாவிலுள்ள
ஒரு பஸ் கம்பெனியின் பெயர்
இது. (அல்லது எண்?)
— லிபிகரன்



விதத்திலும் ஆட்சேபிக்க மாட்டேன். ஆனால், கல்வி வெறும் வேலை வாய்ப்புக்கான ஒரு கருவி மட்டுந்தான் என்று நீ நினைத்தால், அது பற்றி நான் வருத்தமுறுவேன்!' அது வாழ்க்கைக்கே ஆதாரமாயிருக்க வேண்டுமென நினைக்கிறவன் நான். நம் கண்களுக்கு முன்னால் கற்றவர்களை விடவும் கல்லாதவர்கள் மிக அழகாக வாழ்ந்து காட்டி விடுவதும் உண்டு. யார் வாழ்வாங்கு வாழ்கிறார்களோ அவர்கள்தாம் உண்மையில் கற்றவர்கள்! உனக்கு என் வாழ்த்துக்கள்!'' என்றார்.

அவள் ஒரு மரியாதைக்காக, தன் தந்தை வேலை பார்த்த பண்ணையின் முதலாளியையும் காணச் சென்றாள்.

அந்த நேரத்தில் இராமலிங்கனாரின் மூத்த மகன் ஒரு காரில் வந்திறங்கி, வெகு வேகமாக வீட்டுக்குள் நுழைந்தான். அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு, ஒரு மரியாதைக்காக எழுந்து நின்று கொண்டாள் கீதமாலா. அவன் இராமலிங்கனாரையும், கீதமாலாவையும் கடந்து போகையில் இராமலிங்கனார் அவனைக் கீதமாலாவுக்கு அறிமுகப்படுத்தினார். அவன் அங்கே நின்று கீதமாலாவுடன் அன்புடனோ, பண்புடனோ பேசாமல், ''ஓ, அப்படியா!'' என்று அலட்சியமாகக் கேட்டு விட்டு உள்ளே போய்விட்டான். ''இந்தப் பயலுக்குப் படிப்பு ஏறவில்லை. என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தவன், இப்போது சில சீர்திருத்தக் காரர்களோடு சேர்ந்து கொண்டிருக்கிறான்! இன்று நம்மூரில் நடைபெறவிருக்கிற ஒரு மாநாட்டிற்குக்கூட இவன்தான் தலைமை வகிக்கிறானாம்! இவனைப் பற்றி இன்னும் அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை போலிருக்கிறது!'' என்றார் இராமலிங்கனார்.

''நான்கூட அந்த மாநாடு பற்றிய விளம்பரப் போஸ்டர்களைப் பார்த்தேன். சீர்திருத்தப்பணி சிறந்த பணி!''

''ஆமாம், அதனால்தான் சொல்கிறேன், இந்தப் பயல் அதில் ஈடுபடக் கூடாது என்று!''

அவர் குடும்ப விஷயமாக அவள் அதிகம் பேச விரும்பவில்லை.

**ப**ல சமூகப் பிரச்னைகள் கீதமாலாவைத் தேடி வரலாயின. அவளும் ஆர்வமுடன் அவற்றை எதிர்நோக்கிச் சேவை மனப்பான்மையுடன் முடித்து வைத்தாள். ஏழை எளியவர்களுக்கு வைத்திய வசதி, பேறுகால உதவி இப்படிப் பலப் பல.

அந்தப் பிராந்தியத்தில் கீதமாலாவின் சேவைகளைப் பெற்றிராத பள்ளிகளோ, மருத்துவ மனைகளோ, நடைபாதைகளோ இல்லை. அதையெல்லாமே அவள் சேவைகளைப் பெற்றுச் சிறப்புற்றிருந்தன. ஆதரவற்றவர்களுக்கான சிறிய 'இல்லம்' ஒன்றையும்—தன் பெயரில் அல்லாமல், அதற்கு நிதியுதவியவரின் பெயரிலேயே—தோற்றுவித்திருந்தாள் அவள்.

இப்போது தனக்கெனச் சிறிய வருமானங்கள் சிலவற்றையும் அவள் தேடிக் கொள்ளாமலில்லை. அவள் வீட்டுக் கொல்லைப்புறம் கறிகாய்கள் விளையும் ஒரு தோட்டமாக உருப் பெற்றிருந்தது. தன் தெருவுக்கு அண்மையி

லேயே ஒரு சிறிய இடத்தில், தன் தெருவைச் சேர்ந்த பிள்ளைகளுக்கும், நகரின் பிற பகுதிகளைச் சேர்ந்த பிள்ளைகளுக்குமாக ஒரு டியூஷன் வகுப்பையும் அவன் நடத்தி வந்தான். வசதியுள்ள மாணவ — மாணவியர் பணம் கொடுத்தால் அவள் வாங்கிக் கொள்ள மறுப்பதில்லை!

ஒருசமயம், முன்பு தான் கல்வி பயின்ற உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியர் வற்புறுத்தியழைத்ததன் பேரில், அப்பள்ளியில் மாணவர்களிடையே, 'சமூக சேவை — நான் பெற்ற அனுபவங்களும், எனக்குக் கிடைத்த ஆதரவுகளும்!' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றக் கீதமாலா சம்மதித்திருந்தாள்.

மேடையில் ஊர்ப் பிரமுகர்கள் பலரும் வீற்றிருந்தனர். அந்த மேடையில்தான் அவள் இராமலிங்கனாரின் மூத்தமகன் தேவராஜனை மீண்டும் சந்தித்தாள்.

அந்த மேடையில் முதலில் கீதமாலாவை அறிமுகப்படுத்திப் பேசியவரும், அவரைத் தொடர்ந்து பெசியவர்கள் பலரும் 'ஒரு சாதிக்கு — ஒரு சமூகத்துக்கு மட்டும் என்றில்லாமல் — அப்படிப்பட்ட நினைவேயின்றி — இந்தச் சமுதாயம் முழுமைக்குமாகவே சேவை புரிய வந்திருப்பவள் கீதமாலா' என்ற கருத்தில் அவளை வெகுவாகவே புகழ்ந்தனர். தேவராஜன் பேசுகையில், அவர்களுக்கெல்லாம் ஒருபடி மேலே போய், ''வெறும் பேச்சில் என்ன இருக்கிறது? எதையும் செயலில் காட்ட வேண்டும்! எனக்குக் கீதமாலாவை மிகவும் பிடித்திருக்கிறது! அவரது முயற்சிகள் அத்தனையிலும் பங்கேற்கவும், ஒத்துழைக்கவும் நான் காத்திருக்கிறேன்!'' எனச் சொல்லி முடித்தான். அப்போது மேடைக்கு முன்னேயிருந்து கரகோஷங்கள் எழுந்தன.

கடைசியில் கீதமாலாவும், மேடையேறிப் பேசினாள்.

அந்த ஊரின் நடுவாக நதியொன்று போயிற்று. ஊரின் எல்லைக்கு அண்மையிலேயே — ஒரு குறிப்பிட்ட தூரத்திற்கு நீள நெடுக இருபக்கங்களிலும் விசாலமான கரைகளைக் கொண்டதாக இருந்தது. ஆற்றின் அவ்விடத்தில் அவ்வாற்றின் இரு கரைகளிலுமாக வியாபித்திருக்கிற அமைப்பில் ஓர் அற்புதமான இயற்கைப் பூங்காவை உருவாக்கி, ஊர் மக்களையும் மாலை நேரங்களில் அங்கு போய் வருமாறு தூண்டுவது பற்றியும், அந்தப் பூங்காவின் நிர்மாணத்திற்கு அரசாங்கத்தின் அனுமதியையும், இதர உதவிகளையும் பெறுவது சம்பந்தமாகவுந்தான் இப்போது கீதமாலா அந்த மேடையில் பேசினாள். அது சம்பந்தப்பட்ட பணிகளில், செல்வாக்கு மிக்கவர்கள் தனக்கு உதவ வேண்டுமென அவள் கோரிக்கை விடுத்தாள்.

அவள் பேசி முடித்தவுடன், தேவராஜன் அவசரமாக மைக்கின் முன்னால் வந்து நின்று, தான் கீதமாலாவின் கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டு விட்டதாகவும், தேவையான எல்லா உதவிகளையும் செய்ய அந்த க்ஷணமுதலே காத்திருப்பதாகவும் அறிவித்தான்.

மீண்டும் அங்கே கரகோஷம் எழுந்தது.

அடுத்த சில தினங்களில் கீதமாலாவும், தேவராஜனும் சேர்ந்து அந்த உத்தேசப் பூங்கா சம்பந்தமாக மாவட்ட ஆட்சித் தலைவரைக் காணச் சென்றனர். அப்போது தேவராஜன் அவளைத் தன் காரிலேயே அழைத்துச் சென்றான். அவ்விருவரும் காலையில் புறப்பட்டுச் சென்று மாலையில் திரும்பி விட்டனர். அந்த இடைப்பட்ட நேரத்தில் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் பேச்சுவாக்கில் அவளைத் தான் மணந்து கொள்ள விரும்புவதாக அவளிடம் தெரிவித்தான் தேவராஜன்! அப்போது அவனுக்கு உடனடியாக அவள் பதில் எதுவும் சொல்லிவிடவில்லை.

அவ்வாற்றோர இயற்கைப் பூங்கா உருப்பெறத் தொடங்கி ஆறுமாத காலம் ஆகிவிட்டிருந்தது.

திடீரென்று ஒருநாள் அவன் கீதமாலாவின் வீட்டிற்கு வந்தான். அப்போது கீதமாலா மட்டுந்தான் வீட்டில் இருந்தாள். அந்தப் பூங்காவின் தொடக்க விழாவின்போது முதல் அமைச்சருடனும், கவர்னருடனும் சேர்ந்து தான் பிடித்துக் கொண்ட ஸ்போட்டோக்களையும், பத்திரிகைகளில் வந்திருந்த செய்திகளோடு கூடிய படங்களையும், அவளுக்குக் காட்டினான் அவன்.

''எப்போது நம் கல்யாணத்தை வைத்துக் கொள்ளலாம் என்பதுபற்றி நீ இன்னும் யோசிக்கவில்லை போல் தெரிகிறது. நாளைய தினமே உன் பதில் எனக்குத் தெரிந்தாக வேண்டும். நாளை மாலையில் உன் வருகையை எதிர்பார்த்து, நம்மால் உருவாக்கப்பட்ட அந்தப் பூங்காவிலேயே நான் காத்திருப்பேன்!''

கீதமாலா அவன் வார்த்தைகளைக் கேட்டு வெகு அழகாகச் சிரித்துக் கொண்டாள்.

அவன் புறப்பட்டுப் போன பிறகு, 'நாளைக்கு இவரை நான் சந்திக்கையில், இவரே அந்தக் கல்யாணத்திற்கான தேதியையும் நிர்ணயித்து வைத்திருந்து எனக்குச் சொல்லி விடுவார்!' என்ற எண்ணம் ஏற்படவே, அவள் தன்னந் தனியளாயிருக்கையிலும் தன்னை மறந்து சிரித்துக் கொண்டாள்.

---

''கரண்டியினாலே அடி வாங்கினேன் போலிருக்கே?''

''கரெக்டா சொல்லிட்டீங்களே எப்படி?''

''அதை மட்டும் கேட்காதீங்க.''

வி. கே.






# இதோ எங்களுடைய மற்றொரு தோற்றம்

பெரும்பாலான மக்கள் BHEL-ல் இந்தியாவின் மின்சக்தி உற்பத்தியில் ஈடுபட்டவர்கள் என்று தான் நினைக்கிறார்கள். ஆனால் இது எங்களுடைய ஒருபுற தோற்றம்தான். BHEL-இன் வாக்குறுதி மக்களுக்கு மின்சக்தி அளிப்பதோடு மட்டும் நின்றுவிடவில்லை. இதைத்தவிர BHEL-ல் மக்களுக்கு மற்றொரு சக்தியை கொடுப்பதில் முழுமையாக தன்னை அர்ப்பணித்துள்ளது—அந்த சக்தி தான் ஒரு திடமான, வளமான தொழில் அமைப்பிலிருந்து வரும் சக்தி. இன்றைய நவீனமான இயந்திரங்களும் இயக்க அமைப்புகளும் BHEL-ல் தயாரித்தவை. இவைகள் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு மிக அவசியமான எஃகு, சிமெண்ட், பெட்ரோலியம், இரசாயனம், போக்குவரத்து, சுரங்க மற்றும் உரத் தொழிற்சாலைகளில் உபயோகிக்கப்பட்டு வருகின்றன.

வளர்ந்து வரும் இந்திய தொழில் துறைகளில் உபயோகிக்கப்படும் நவீன இயந்திரங்களுக்கு ஏற்றவாறு *BHEL*-ல் பலதரமான, பிரத்யேக இயந்திரங்களையும் அமைப்புகளையும் உருவாக்கியுள்ளது. இவைகள் மிக அவசியமான தொழிற்சாலைகளுக்கு ஏற்றவாறு பிரத்யேகமாக தயாரிக்கப்பட்டவை. இவைகள் உதாரணமாக எஃகு, காகிதம், ரப்பர், துணிகள், போக்குவரத்து, சுரங்க மற்றும் பல தொழிற்சாலைகளின் தேவைகளுக்கு ஏற்ப உருவாக்கப்பட்டன.

1977–78-ம் ஆண்டில் மட்டும் *BHEL* ரூபாய் 100 கோடிகளுக்கு மேல் இயந்திரங்களை தயாரித்து கொடுத்துள்ளது.

தற்பொழுது *BHEL*-ல் 22-க்கும் மேற்பட்ட மிகப்பெரிய தொழிற்துறை திட்டங்களில் ஈடுபட்டுள்ளது—இயந்திரங்களை தயாரித்து தருவது மட்டுமல்ல. எலக்ட்ரிக் மோட்டார்கள் ட்ரான்ஸ்பார்மர்கள், சுவிட்சுகியர்கள், ரெக்டிபையர்கள், கப்பாசிட்டர்கள், தொழிற்சாலை டர்பைன்கள், டர்போ அமைப்புகள், சென்ட்ரிப்யூகல் கம்ப்ரெஸர்கள், பாய்லர்கள், உஷ்ண இயந்திரங்கள், எலக்ட்ரோஸ்டாடிக் ப்ரிசிபிடேட்டர்கள், விசிறிகள் மற்றும் வால்வுகளை தயாரித்து மேற்கூறிய மிகப்பெரிய தொழிற்துறை திட்டங்களுக்கு கொடுக்கிறது.

*BHEL*-லின் ஈடுபாடு இத்துறைகளில் தொடர்ந்து அதிகரித்து வருகிறது. இன்று பலவகையான தொழிற்சாலைகளுக்கு ஏற்ப எல்லா இயக்கக் கட்டுப்பாடுகளையும் மற்ற இயக்க அமைப்புகளையும் உருவாக்கி அளிக்கிறது.

*BHEL*—குறித்த காலத்தில் முழுமையான திறமையுடன் தொழிற்சாலைகளுக்கு ஏற்றவாறு சேவை புரியும் நிலையில் உள்ளது.

*BHEL*-ல் மேற்கூறியவைகளைத் தவிர மற்றும் ஒரு சேவையை நாட்டின் தொழிற்துறை வளர்ச்சிக்கு அமைத்துள்ளது. இதன் பெயர் 'இண்டஸ்ட்ரியல் ட்ரைவ் சிஸ்டம்ஸ் குரூப்'. இந்த நிறுவனம் சிஸ்டம்ஸ் இன்ஜினியரிங் அடங்கிய மின்சாரத் தளவாடங்களுக்கும், கட்டுப்பாடு இயக்கங்களின் வடிவமைப்பிற்கும், எஃகு ஆலைகளின் நிர்மாணத்துடன் கூடிய இயக்கத்திற்கும், தாதுக்கனி, காகிதம், சுரங்கம் வெட்டல் போன்ற தொழில் துறைகளுக்கான ஒப்பந்தங்களை நிறைவேற்றி வருகிறது. மேலும் இந்தக் குழு விரிவான இயந்திரப் புழக்க ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வாடிக்கையாளர்களின் மாறிவரும் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் நவீன இயந்திரங்களின் உற்பத்திக்கு வித்திட்டு வருகிறது.





மக்களுக்கு சக்தி

**பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

விற்பனை பிரிவு
நியூ டெல்லி ஹவுஸ்
பாரக்கம்பா சாலை, புதுடெல்லி-110 001
பதிவுபெற்ற அலுவலகம்
18-20 கஸ்தூரிபா காந்தி சாலை புதுடெல்லி - 110 001

SAA BHEL 1071A

"கடவுளுக்கு அஞ்சு! அடுத்தபடியாகக் கடவுளுக்கு அஞ்சாதவனைக் கண்டு அஞ்சு!"



— போலந்து பழமொழி

— டி. ஞானகிமணாளன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இப்போது தேவராஜனைப் பார்த்துவிட்டு அந்த மூங்கில் பாலத்தின் மறு முனையில் நின்றிருந்த கீதமாலா, அவன் நெருங்கி வந்தவுடன், முகத்தில் புன்னகை தவழ, "எனக்காகக் காத்திருப்பதாகச் சொல்லிவிட்டு, இப்போது என்னையே காத்திருக்க வைத்து விட்டீர்களே! பரவாயில்லை. வாருங்கள்!" என அவனுக்கு வரவேற்புரைத்த பிறகு, மேலும் ஒரு கணம் கூடத் தாமதியாமல் அவனுக்கு முன்னால் நடந்துபோய் ஆற்றங்கரை நடைபாதையின் சரிவில் ஆற்றைப் பார்த்தவாறு அமர்ந்து கொண்டாள்.

"நானும் குடைந்து குடைந்து தேடிப் பார்த்தேன், என் மனத்தில் எங்கேயும் யார் மீதும் காதல் அரும்பியிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அப்படியிருந்தும், உங்களை மணந்து கொள்ள என் பெற்றோரிடம் நான் அனுமதி கோரினேன். அவர்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா?"

"என்ன சொன்னார்கள்?"

"அடி, பேராசைக்காரி! பல லட்ச ரூபாய்களுக்குச் சொத்துக்கள் வரும் என நினைத்தா ஆசைப்பட்டு விட்டாய்? இனி அந்த வீட்டில் உனக்கு வேலையில்லை என்று கூறி விட்டனர்."

"அவ்வளவுதானே! என் வீட்டில்கூட எல்லாருமே ஆட்சேபித்தனர். அவர்களிடம், உனக்கும் எனக்கும் கல்யாணம் நடப்பது உறுதி என்ற எண்ணத்தில், எனக்குரிய சொத்துக்களைப் பிரித்துக் கொடுத்துவிடும்படி கூறிவிட்டு வந்து விட்டேன். நானேய இனமே அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதாக அவர்களும் சொல்லி விட்டனர். அடுத்த வாரமே நம் கல்யாணம் 'ஜாம்ஜாம்'மென்று நடக்கும். அதன் பிறகு நீயும் நானும் சேர்ந்து...!"

இப்போது கீதமாலாவின் அதரங்கள் ஒரு பொருள் பொதிந்த புன்னகையைச் சிந்தின.

"பந்த பாசங்களை அறுத்துக் கொண்டு, சொத்துக்களையும் பிரித்தெடுத்துக் கொண்டு வருகிற உங்களால் இந்தச் சமுதாயத்திற்கு என்ன சேவை செய்ய முடியும்? பாறாங்கல்லால் பயிர்களுக்கு என்ன லாபம்! மென்மையான தண்ணீர்தானே கலபமாகப் பாய்ந்து சென்று பயிர்களைச் செழிக்க வைக்கிறது. சொத்துக்களையே மனத்துக்கான பெருஞ்சுமைகள் என்று கருதுகிறவள் நான்! ... உங்களை மணந்து கொள்ள விரும்புவதாக என் தாய் தந்தையாரிடம் நான் கூறியதுகூட அவர்களின் மனங்களைத் தெரிந்து கொள்ளவே!"

அவள் சற்று நேரம் மௌனமாயிருந்து விட்டு மீண்டும் பேசினாள்: "சொத்துடைமையை நான் குறை கூறுவதாக நீங்கள் நினைக்கக் கூடாது. என் பணிகளுக்கு உதவியவர்கள் பலரும் செல்வந்தர்களே என்பதை நான் உணருகிறேன். அதே நேரத்தில், எந்தக் காரியத்திற்கும் யாராலும் இயன்ற அளவில் உதவ முடியும் என்பதையும் நான் புரிந்து கொண்டிருக்கிறேன். பந்தபாசங்களைத் துறக்க முடிந்த உங்களால் இந்தச் சொத்துக்களை இழக்க முடியவில்லையே என்பதைச் சொல்லத்தான் நான் இவ்வளவும் பேசுகிறேன்!... இனி, அவற்றையெல்லாம் விட்டொழித்து விட்டு வந்தாலும் உங்களை என்னால் விரும்ப முடியாது. ஏன் தெரியுமா?"

தேவராஜன் கீதமாலாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"எப்படியோ புகழ் பெற்றுவிட்ட சிலரை நீங்கள் பார்க்கிறீர்கள், நினைக்கிறீர்கள். அவர்களைப் போலவே புகழ் பெற வேண்டுமென்பதுதான் உங்கள் நோக்கமும். பிறர் நினைப்பதாக நீங்களே உங்களுக்குச் சாதகமாக நினைத்துக்கொள்வது, அவை வெகு தந்திரமாக வெளிப்படுத்துவதும் உங்களிடமுள்ள சிறப்பு அம்சங்கள்! பேசாமல் நீங்கள் ஓர் அரசியல் கட்சியிலோ, அல்லது வேறு மாதிரியான இயக்கத்திலோ சேர்ந்து விடலாம். நீங்களேகூட அப்படிப்பட்ட ஒன்றை ஆரம்பிக்கலாம். நீங்கள் விரும்புகிற புகழ் வெகு விரைவிலேயே உங்களுக்குக் கிடைக்கும். அதை விட்டுவிட்டு...!"

தேவராஜனின் முகத்தில் கோபக் குறிகள் தெரிந்தன. கீதமாலா கொஞ்சமும் பயப்படவில்லை. அவள் தொடர்ந்து பேசினாள்: "நான் புகழைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம் வேறு மாதிரியானது. புகழை விரும்புகிற ஒருவருக்கு அந்தப் புகழ் கிடைத்தால், அது புகழே அல்ல. அதோ, அந்த ஆலமரத்தைப் பாருங்கள். அதன் விழுதுகள் அனைத்தும் அவதாரம் எடுத்தாற்போல் மேலிருந்து கீழ் நோக்கிப் போவதன் அர்த்தம் என்ன? மண்ணில் காலூன்றிப் பலப்பட்டு மரத்தைத் தாங்குவதுதான் அவற்றின் நோக்கமே! இந்தச் சமுதாய விருட்சத்தின் விழுதுகளுள் ஒன்றாக இருக்கத்தான் நான் ஆசைப்படுகிறேன். நீங்களோ, எல்லாக் கிளைகளுக்கும் மேலாக உச்சாணிக் கொம்பாகவே இருக்க ஆசைப்படுகிறீர்கள்! உங்களுக்குப் பக்கத்திலிருக்க என்னால் எப்படி முடியும்? ஆனால் ஒன்று, நீங்களும் நானும் இந்தச் சமுதாயத்தை விட்டு எங்கும் போய்விட மாட்டோம்! ...உங்கள் மனத்தை நான் புண்படுத்தி விட்டேன். என்னை மன்னியுங்கள்!"

தேவராஜன் 'விருட்'டென எழுந்து வேகமாக நடந்தான்.

கடைசியில் தன்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவன் எழுந்து போனது பற்றிக் கீதமாலாவுக்கு வருத்தமொன்றும் ஏற்படவில்லை. அவள் அறிவு விசாலமுறவும், அவளுக்கு அனுபவங்கள் கூடவும் அவனும் உதவியிருக்கிறானே!



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1979

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 1000 |
| இரண்டாம் பரிசு | ரூ. 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்) | ரூ. 500 |

ஆகமொத்தம் ரூ 2000 - பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளருக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர்கள் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஏப்ரல் 30.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப்பெற போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம்.
- எவ்விதக் கடிதப்போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது —

ஆசிரியர் கல்கி, சென்னை-600 032.





# காஞ்சி அன்னைக்குக் காஞ்சன விழா

உருத்திரனார் காமவேளை உருத் தெரியாதவனாக 'அனங்க' னாக்கியது தெரிந்த கதை. அம்பாள் தனது அபாங்க நோக்கால் அனங்கனுக்கு மீண்டும் உயிரும் ரதி மட்டும் அநுபவிக்கக்கூடிய உருவும் தந்ததும் தெரிந்தகதை.

ஆனால் பழிக்குப் பழியாகக் கோடி ருத்திரர்களைக் கோடி காமர்கள் வென்றது தெரியாத கதை. மார்க்கண்டேய புராணத்தில் ஒரு பகுதியாக உள்ள ''காமாக்ஷி விலாஸ''த்தில் இக்கதை விரிகிறது.

''காமம் இருக்க வேண்டும்; லோகம் இருக்க வேண்டும். இவை இருந்தும் இவற்றை முறைமைப் படுத்தி, அதன் மூலமே இவற்றின் ஆட்சிக்கு மெல்ல மெல்ல வீழ்ச்சி உண்டாக்கி, முடிவில் இறைமையில் ஒருமை உறவேண்டும். இதுதான் சுவாரஸ்யம். லோகமில்லை, காமமில்லை என்று மௌன தக்ஷிணாமூர்த்தி நிலையிலேயே இருந்துவிட்டால் தன் லீலா விலாஸத்துக்கு, நவரஸ நாடகத் திறனுக்கு இடமில்லையே!'' என்று பிரம்மசக்தி எண்ணினாள்.

இப்படி, லோகம் என்று ஒன்று நடக்க வேண்டும் என்று பரமாத்மாவுக்கு ஏற்பட்ட காமத்துக்கு அக்ஷமாக (அச்சாக, axis—ஆக) இருந்த சக்திதான் காமாக்ஷி.

பூமியின் நாபி ஸ்தானமாக, நம் தெய்வத் தமிழ் நாட்டில், ஆன்றோர் மிகு தொண்டை மண்டலத்தே விளங்கும் கச்சியம்பதியில் குடி கொண்டாள் காமாக்ஷி.

தன் ஸந்நிதானத்திலேயே மறுபடியும் ருத்ரனையும் காமனையும் சத்ருக்களாக நிற்க வைத்தாள்.

'முன்பு நம் கண்ணைத்திறந்த மாத்திரத்தில் பொசுங்கின மன்மதப் பயல் இப்போது உன்மதத்துடன் எதிர்த்து நிற்கிறானே' என்று சினமுற்ற பரமேசன் தன் உடலை ஓர் உதறு உதறினான். உடன் அவன் உள்ளிருந்து தெறித்தனர் கோடி ருத்ரர்கள். காம வேளுக்கு வெற்றி வாங்கித்தந்தே தீருவது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தாள் தேவி. அவள் ருத்ரனைப் போல் பிரயாசையுடன் உடலைக் குலுக்கவில்லை, சீறிச் சினக்கவுமில்லை. கமலம் போன்ற தன் பட்டு இமைகளை மெல்ல ஒரு கொட்டுக் கொட்டினாள்.

அவ்வளவே! காமவேளின் ஸாக்ஷாத் பிரதிகளாகக் கோடி காமர்கள் உதித்து விட்டனர்.

அப்புறம் வேலை அநாயாஸமாக முடிந்தது. கோடி காமர்களிடம் கோடி ருத்ரர்கள் தோல்வியுற்றார்கள்!

எல்லாமே விளையாட்டுத்தான்!

ஒன்றேயான மூலப்பொருள் சிவ—சக்தியாகப் பிரிந்து, பிரிந்தும் ஒருமையை மறவாமல் விளையாடிய விளையாட்டுத்தான்.

லோக ஸிருஷ்டியும் ஒரு கோணத்தில் வேண்டியதே, பயனுள்ளதே, பொருள் உள்ளதே என்று காட்டுவதற்குச் செய்த விளையாட்டு.

மூலருத்ரன் ஏகம்பனாகக் கோயில் கொண்டான். அவன் படைத்த கோடி ருத்ரர்களும் அவனது கருவறை விமானத்தில் குடி புகுந்தனர். அதனால் அது ''ருத்ரகோடி'' என்று புகழ் பெற்றது.

மூல காமன், பிரம்மத்தின் மூல காமமாம் தேவியின் கண்ணில் குடிகொண்டான். காமத்தின் அக்ஷமானவள், காமனை அக்ஷி (கண்)





○ 1976ல் நடந்த காமாட்சி கோயில் கும்பாபிஷேகத்தின்போது ஆதிசங்கரர் விமானத்துக்கு ஸ்ரீ புதுப் பெரியவாள் அபிஷேகம் செய்யும் காட்சி.

யாகப் பெற்று ''காமாக்ஷி'' என்ற பெயரை மற்றுமொரு பொருளிலும் பெற்றாள்.

அவளது கண்கொட்டில் பிறந்த கோடி காமர்களும் அவளது கர்ப்பக் கிருஹ விமானத்தில் இடம் கொண்டனர்.

ஆதலால் இது ''காமகோடி விமானம்'' என்று பிரஸித்தி பெற்றது.

''காமகோடி''க்குத் தத்வபரமாகப் பல அர்த்தமுண்டு. இது புராணத்திலுள்ள ஒரு கதைவாயிலான அர்த்தம். இதிலேயும் தத்வமுள்ளது.

ஸூரிய சந்திரர்கள் இந்தக் காமகோடி விமானத்தைவலம் வருவதாக ஐதிஹ்யம்.

காஞ்சி காமாக்ஷியின்

ரா. கணபதி

கருவறை மீதுள்ள காமகோடி விமானத்துக்கு மேலும் ஒரு பெருமை உண்டு. அதாவது, காஞ்சியிலுள்ள, மற்ற எல்லா தேவாலயங்களின் மூலஸ்தான விமானமும் — அவை சிவனுக்குரியனவாயினும், விஷ்ணுக் குரியனவாயினும்— இந்தக் காமகோடி விமானத்தைப் பார்க்கவே அமைந்திருக்கும்!

விமானம் என்றால் விசேஷ அளவை என்று அர்த்தம்.

இசையைத் தாளம் அளவைப் படுத்துகிறது. உயிரை இதயத் துடிப்பு அளவைப் படுத்துகிறது. மந்திரங்களை ஸ்வரம் அளவைப் படுத்துகிறது. அளவை போனால் இவற்றின் பயனும் போய்விடும். ஆகம சாஸ்திரங்கள் வெளி (Space) என்ற உருவில் உள்ள இறைச் சக்தியைப் பிராகாரத்துக்கு இன்ன அளவை, அர்த்த - மஹா மண்டபாதிகளுக்கு இன்ன அளவை, கோபுரத்துக்கும் கொடி மரத்துக்கும் இன்ன அளவை, மூர்த்திகளுக்கு இன்ன அளவை என்றெல்லாம் நிர்ணயித்துத் தருகின்றன. அந்த அளவைகளில்தான் இறைச் சக்தியின் ஒலியுருவான மந்திரசக்தி விசேஷ பலன் தரும். வானொலிப் பெட்டியில் இந்த அலை அளவையில்தான் இந்த நிலையம் பேசும் என்பது போன்ற - விஞ்ஞான பூர்வ உண்மையே!

இந்த அளவைகளுள் பிரதானமாக இருப்பது ஸாக்ஷாத் மூலமூர்த்திக்கு மேலுள்ள ஸ்தூபத்தின் அளவை. விசேஷ அளவை கொண்ட அதுவே விமானம். வி — விசேஷமான, மானம் — அளவை.

விசேஷத்துவத்தைக் காக்கப் பொன்னோ, வெள்ளியோ, தாமிரமோ வேய்வதுண்டு. சைவக் கோயிலாம் தில்லை 'பொன்னம்பலம்' என்றே பெயர் பெற்றுள்ளது. திருவரங்கம், திருப்பதியிலும் மூலவிமானம் பொன் வேயப் பெற்றுள்ளது. ஸமீபத்தில் குருவாயூரிலும் பொன் வேய்ந்திருக்கின்றனர்.

சக்தி ஆலயங்களுள் தேவியே பிரதான மூர்த்தியாக நான்கு திசையிலும் கோபுரங்கள் சூழத் தனிக் கோயில் கொண்டிருப்பது காஞ்சி காமாக்ஷியின் காமகோட்டம்தான். எனவே இதன் மூலஸ்தான விமானமான காமகோடி விமானத்துக்குப் பொன் வேய்வது பொருத்தமே அல்லவா?

இந்த எண்ணம் ஸ்ரீகாஞ்சி ஜகத்குரு அவர்களின் பொன் மனத்தில் உதித்த விசேஷம், வெகு விரைவிலேயே காரியபூர்த்தி கண்டு, இந்தத் தை வஸந்த பஞ்சமியன்றே (பிப்ரவரி 1) ஸ்ரீகாமாக்ஷிக்கு ஸ்வர்ண விமான கும்பாபிஷேகம் நடக்கிறது. ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் மூலஸ்தான கோபுரத்துக்கும் இதே நாளில் கும்பாபிஷேகம் நடக்கிறது.

சக வருடம் 1315, ஸ்ரீமுக ஆஷாட சுக்ல தசமியில் (கி. பி. 1392, ஜூன் 21) ஹரிஹர ராய மன்னர் இக் காமகோடி விமானத்துக்கு முற்றிலும் செப்புப் பட்டைகள் போர்த்தியதை, ஆலயத்தில் ஜய ஸ்தம்பத்துக்கு அடுத்து உள்ள ரிஷி கோபுரக் கல்வெட்டு செப்புகிறது. பிற்பாடு அச் செப்புக் கவசம் காணாமல் போயிருப்பதிலிருந்தே அதற்குப் பொன் முலாம் பூசப் பட்டிருக்க வேண்டும் என்பது ஊகம். முன்னிருந்ததைவிட சிறப்பாக இப்போது பொன்விமானமெடுப்பதால், இந்நாளில் ஆஸ்திகம் குறைந்து விட்டது என்ற அவப்பெயரிலிருந்தே நம்மை ஸ்ரீ ஆசார்யாள் மீட்டு விட்டார்கள் எனலாம்.

பொன் வேய்வது வெறும் அலங்காரம் மட்டுமல்ல. மின்சாரத்துக்குத் தாமிரத்தையும் டங்ஸ்டனையும் விசேஷமாக எடுத்துக் கொள்கிறோம், புற்று நோய்க்கு கோபால்ட் கதிர் கொடுக்கிறோம்; இவ்வாறு மந்திரங்களின் சப்த அதிர்வுகளை உலக நலன் விளையுமாறு பரப்புவதற்கும், பலவிதமான தீட்டு முடக்குகளைக் களைவதற்கும் ஸ்வர்ணம் உதவுகிறது. ஆகவே பொன் விமானப் பணி லோகக்ஷேமார்த்தமான ஒரு திவ்விய காரியம் தான்.

ஒரு சந்தர்ப்பத்தில் காமாக்ஷி தொண்டை மண்டலம் முழுவதிலும் பொன் - மழை பொழிந்தாளாம். ''துண்டீராக்யே மஹதி விஷயே ஸ்வர்ண வ்ருஷ்டி ப்ரதாத்ரீ'' என்று இதை மூகபஞ்சசதி புகல்கிறது. பொன் மழை பொழிந்தவளின் பொன் விமானத்துக்கு ஆசாரியர்களின் பொற்கரம் கும்பமழை பொழிவது நமக்கெல்லாம் பொன்மாரி தான்.

## எது முதலில்?

அரசியல் பதவியில் உள்ளவர்கள் ராஜிநாமா பயமுறுத்தல் செய்வதையும் ஓரிரு நாள் கழித்து அதனை 'வாபஸ்' பெறுவதையும் வழக்கமாகப் பார்க்கிறோம்.

விரைவிலேயே ஏதேனும் முதலமைச்சருக்கோ பிரதமருக்கோ இப்படி ஒரு கடிதம் வந்தால் வியப்பாக இருக்காது:

''எனது ராஜிநாமா வாபஸ் கடிதத்தை முதலில் அனுப்புகிறேன். பெற்றுக் கொள்ளுங்கள். ராஜிநாமா கடிதம் கார சாரமாகத் தயாராவதால் அனுப்புவதற்குச் சற்றே தாமதமாகிறது!''

—அ. ஆ.

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

## 25. ஏழைகளுக்கு உதவ ஓர் ஆசிரமம்

**150** வீடுகளைக் கொண்ட அந்தக் கிராமத்தில் தபால் பெட்டி கூடக் கிடையாது. கிராமத்தைச் சுற்றிலும் இருந்த செம்மண்ணும் பாறைகளும் நிரம்பிய பூமியில் மழை பெய்தால் விளைச்சல் காணலாம். ஆனால் மழை ஆண்டு தவறாமல் பெய்யும் என்று நம்ப இடமில்லை.

பஞ்சம் அவர்களுக்குப் பழக்கமானது. மூட நம்பிக்கைகள் மக்களிடையே மிகுதியாக உண்டு. இருப்பினும் வெய்யிலில் வதங்கிய அந்தக் கிராமத்தில் ஆசிரமம் அமைப்பதில் இரு அனுகூலங்கள் இருந்தன. முதலாவதாக அந்த நிலங்களின் சொந்தக்காரர் ரத்னசபாபதி கௌண்டர் தாராள மனப்பான்மை காட்டியதுடன் உறுதுணையாகவும் விளங்கினார்.

வாக்களித்தபடி நாலு ஏக்கர் நிலத்தைக் கொடுத்ததுடன் மண் சுவரும் ஓலைக் கூரையும் கொண்ட ஆறு குடில்கள் உருவாகவும் வழி வகுத்தார். இவைதாம் ஆரம்பகட்டத்தில் ஆசிரமமாகத் திகழ்ந்தன. இந்தக் குடில்கள் தயாராகும் வரை ஆசிரமத்தின் நிறுவன அங்கத்தினர்கள் தமது வீட்டிலும் தமது நண்பர்கள் வீட்டிலும் தங்குவதற்குக் கவுண்டர் ஏற்பாடு செய்தார். சீர்திருத்த மனப்பான்மை கொண்ட ஆசிரமவாசிகளின் பழக்க வழக்கங்களைப் பொறுத்துக் கொள்ளுமாறு மக்களை அவர் வற்புறுத்தவும் செய்தார்.

புதுப்பாளையத்தில் இருந்த இன்னொரு அனுகூலம் கதர் தயாரிப்பில் திறம்பட ஈடுபடக் கூடியவர்கள் பலர் அதைச் சுற்றிலும் வாழ்ந்ததுதான். வீட்டிலே சொந்தத்தில் தறி வைத்திருந்த நெசவாளர்கள்; ராட்டையில் நூல் நூற்கும் ஆற்றலுடைய பெண்கள் — மில் தயாரிப்பான நூல் வந்தபிறகு ராட்டைகளைத் தங்கள் எளிய இல்லங்களின் பரண்களில் தூக்கிப் போட்டு விடவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளான பெண்கள்.

ஆசிரமம், பஞ்சு கொடுக்கத் தயாராயிருக்கிறது என்றும் அதனை நூலாக நூற்கக் கூலி தரவும் தயாராயிருக்கிறது என்றும் தெரிய வந்ததும் பெண்கள் தங்கள் பழைய இராட்டைகளைப் பரணிலிருந்து இறக்கினர். தூசி தட்டி இயங்கச் செய்தனர். இராட்டை சுழலும் ஒலி எல்லா இல்லங்களிலும் எழுந்தது. அது உண்மையில் உயிர் காக்கும் இசையாக விளங்கியது.

நெசவாளியாகவும் விளங்கி விவசாயத்திலும் ஈடுபட்டிருந்த கவுண்டர்களைத் (இவர்களது மனைவிமார் நூல் நூற்கத் தெரிந்தவர்கள்) தவிர பலவித தீண்டாதார் வகுப்பினரும் இருந்தனர். இவர்களில் ஒரு சாரார் கொச்சைத் தெலுங்கு பேசினர். அப்பகுதியில் இங்குமங்குமாகச் சில முஸ்லீம்களும் வாழ்ந்தனர்.

ஆரம்பத்திலிருந்தே ஆசிரமவாசிகள் வெளிப்படையாகத் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்தனர். தீண்டாமை ஒழிப்பினைப் பகிரங்கமாக அனுஷ்டிக்கவும் செய்தனர். தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்த ஐந்து சிறுவர்கள் ஆசிரம அங்கத்தினர்களாக ஆரம்பத்திலேயே சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அவர்கள் மற்றவர்களுடன் சேர்ந்து சாப்பிட்டனர், வாழ்ந்தனர். சம்பிரதாய விரோதமான இந்தச் செயல் உடனடியாக ஓர் எதிர் விளைவை உண்டாக்கியது — ஆசிரமம் பகிஷ்கரிப்புக்கு உள்ளாகியது.

ஆசிரமவாசிகளும் அவர்களுக்குத் துணை நின்ற கௌண்டர் குடும்பமும் பாலும் காய்கறிகளும் இல்லாமல் காலத்தை ஓட்டப் பழகிக் கொள்ள வேண்டும் போல் தோன்றியது. அல்லது, ஒரே ஒரு பால்காரன், யாரும் அறியாமல் கொண்டு வந்து தந்த சிறிதளவு பாலுடன் திருப்தி அடைய வேண்டியிருந்தது.



இந்தச் சமூகப் பிரஷ்டம் சீக்கிரமே பிசுபிசுத்தும் விட்டது. ஆனால் மனத்தாங்கலுற்ற கிராமவாசிகள் என்ன செய்வார்களோ என்ற கவலை நீடித்தது. ஆசிரமத்துக்குத் தீவைத்து விடப் போகிறார்கள் என்ற ஒரு வதந்தியையொட்டி சி. ஆர். எல்லாருக்கும் தீயணைப்பு பயிற்சி அளித்தார். நல்லவேளையாக அந்த வதந்தி பொய்யே என்றாகி விட்டது. இருப்பினும் தீயணைப்புப் பயிற்சி பெற்றது வீண் போகவில்லை. பின்னால் ஒருமுறை தீண்டாதார் குடியிருந்த பகுதிகளில் தீப்பிடித்துக் கொண்டபோது ஆசிரம வாசிகள் அவர்களுக்கு உதவ முடிந்தது.

பல ஜாதியினரான பதினேழு நபர்கள் அடங்கிய சி. ஆரின் புதிய குடும்பத்தில் பதினைந்து வயதான நரசிம்மனும் பன்னிரண்டு வயதான லக்ஷ்மியும் அங்கம் வகித்தார்கள். முதலில் ஓலைக்கூரை வேய்ந்த குடிசையில்தான் இரு குழந்தைகளுடனும் ஆசிரமத்தின் பணம் அடங்கிய இரும்பு பீரோவுடனும் வாழ்ந்தார் சி. ஆர். பின்னால்

நாம் ஆயிரக்கணக்
கான நற்பண்புகளைப்
பெறுதல் எளிது; ஆனால்
ஒரு குற்றத்தைத் திருத்திக்
கொள்வது அரிது.

— புரூயேர்

— இரா. மோகன்

---

ஓட்டுக் கூரையுடன் கூடிய ஒரு குடிலுக்கு மாறினார்.

புதிய குடியிருப்பின் ''பெரிய அறை'' 12 அடி நீளம் 5அடி அகலம் கொண்டது. அதை அடுத்துச் சிறிதாக இரு அறைகள். இவற்றில் ஒன்று சமையலறை. மதுரையில் வழக்கறிஞராக விளங்கித் தொழிலைத் துறந்து விட்ட என். நாராயணன் ஆசிரமத்தின் நிர்வாகியாக விளங்கினார். கதர் உற்பத்திக்குப் பொறுப்பு ஏற்றவர், 1920லிருந்தே வி. ஆரின் இளம் சகாவாக விளங்கிய கே. சந்தானம்.

கதர் தொட்டுப் பார்த்தால் கரகரப்பானதுதான். ஆனால் குறுக்கேயும் நெடுக்கேயும் சென்று பின்னிக் கொள்கிற பாவு நூலிழைகள் போல செயல்படும் பரஸ்பர உதவி என்கிற அம்சத்தில் அத்துணி மிகவும் நேர்த்தியானது. சர்க்கா, பரம ஏழைகளுக்கு வயதான காலத்தில் தரப்படும் 'பென்ஷன்' போன்றது. வேலை இல்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க வல்லது.

ராட்டையில் நூல் நூற்ற பெண்கள் ஆரம்பத்தில் மாதம் ஒரு ரூபாய் அல்லது ஒன்றரை ரூபாய் சம்பாதித்தார்கள். இது அந்த நாளைய நிலைமையை மனத்தில் வைத்துக் கொண்டு பார்த்தாலும் கூட மிகவும் குறைவு தான். இருப்பினும், இது, ஒரு குடும்பத்தின் சம்பாத்தியத்தில் கால் பங்கு என்பதை உணர்ந்தால் இந்த வருவாயின் முக்கியத்துவம் புரியும். இரண்டே மாதங்களுக்குள் ஆசிரமத்தைச் சுற்றி இருந்த இருபது கிராமங்களில் ஆயிரம் பெண்கள் நூல் நூற்றுக் கொண்டிருந்தார்கள். ஆகஸ்டு மாத வாக்கில் அவ்வட்டாரத்தில் எழுபது நெசவாளிகள் கைராட்டையில் நூற்கப்பட்ட நூலைப் பயன்படுத்திக் கொண்டிருந்தனர்.

இதற்கு அடுத்தாற்போல் முக்கியத்துவம் பெற்றது மதுவிலக்கு. பல இரவுகளில் நன்கு அலங்கரிக்கப்பட்ட ஒரு மாட்டு வண்டி வி. ஆரையும் அவரது சகாக்களையும் பக்கத்து கிராமங்களுக்கு ஏற்றிச் செல்லும். (வண்டி மாடுகளைச் சந்தையில் வாங்கும் போது வி. ஆர்., மாடு பிடிப்பதில் தமக்குள்ள நுணுக்கமான அறிவைக் காட்டிப் பலரை வியப்பில் ஆழ்த்தினார்.1)

கிராமத்தை அடைந்ததும் முரசறைந்து தங்கள் விஜயத்தை அறிவிப்பார்கள். ஒரு கூட்டம் சேர்ந்துவிடும். வண்டியைச் சூழ்ந்து நின்று, பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தில் படங்களைப் பார்ப்பார்கள். அந்தப் படங்கள் குடிப்பதால் ஏற்படும் தீமைகளைத் தெளிவாக்கின. ஆசிரமவாசிகளின் மது விலக்குப் பிரசாரப் பாடல்களையும் மக்கள் கேட்பார்கள். பின்னர் மாட்டு வண்டி அடுத்த கிராமத்துக்குப் பயணத்தைத் தொடரும். அங்கே மறுபடி பிரசாரம் நடக்கும். இதுபோல் ஓர் இரவில் ஐந்து ஆறு கிராமங்களுக்குச் செல்வார்கள்.2

1922–23ல் காங்கிரஸின் தேசியத் தலைவராக விளங்கிய வி. ஆர்., 1925ல் தெற்கே ஏதோ ஒரு மூலையில் கிராமம் கிராமமாகச் செல்லும் பிரசாரகராக மாறி இருந்தார். இதனால் தமக்குக் கௌரவக் குறைவோ மதிப்புக் குறைவோ ஏற்பட்டு விட்டதாக அவர் எண்ணவேயில்லை. அத்துடன் அவர் தமது பிரசாரத்தில் வெற்றி பெற்றும் வந்தார். கள், சாராயக் கடைக்காரர்கள் இவரது பிரசாரக் கூட்டங்களைக் கலைக்க வேண்டும் என்ற முடிவுக்கு வர வெகுகாலம் ஆகவில்லை.

பொதுவான பிரசாரம் தவிர தனிப்பட்ட முறையிலும் வி. ஆர். பலரிடம் பேசித் திருத்தினார். சக்கிலியர் வகுப்பைச் சேர்ந்த வீரன் என்பவனை அவர் திருத்தியதை ஓர் உதாரணமாகச் சொல்லலாம். வீரனுடைய மனைவி வந்து கேட்டுக் கொண்டதன் பேரில் வி. ஆர். வீரனை அழைத்து வர ஆள் அனுப்பினார். அவன் தான் குடிபோதையில் இருந்ததே இல்லை என்று சாதித்தான். ''நேற்று இரவு நீ குடித்துவிட்டு மனைவியை அடித்தாயாமே'' என்று வி. ஆர். மீண்டும் கேட்டார். ''சுத்தப்பொய்'' என்றான் வீரன்.

திடீரென்று ஒரு யோசனை உதயமாக, வி. ஆர்., வீரன் கரத்தில் ஒரு ஜதை செருப்பை வைத்தார். ''இந்த ஜோடி செருப்பின் மேல் ஆணையாக நீ உண்மையே பேசுவதாகச் சொல்லு பார்க்கலாம்'' என்றார்.

வீரன் நிலைகுலைந்து போய் வி. ஆர் காலில் விழுந்தான். உண்மையை ஒப்புக் கொண்டு, இனி கள் – சாராயத்தைத் தொடுவதே இல்லை என்று சத்தியம் செய்தான். 3 வாக்களித்தபடி சாகும் வரை குடிக்காமலேயே இருந்ததோடு வீரன், ஆசிரமத்தின் காலணித் தயாரிப்புப் பிரிவுக்குப் பொறுப்பேற்றான். சக்கிலியரின் ஊசியைப் பயன்படுத்துவதிலும் திறமை காட்டிய வி. ஆர்., அந்தப் பிரிவை நடத்துவதில் உபயோகமான யோசனைகளை அவ்வப்போது கூறிவந்தார்.

(தொடரும்)

தமிழாக்கம்: லெ. ராஜேந்திரன்



---

1. ஏ. கே. வேங்கடேசன், ராஜாஜி - 93, பக்கம் 236A
2. மேற்படி
3. மேற்படி



# செல்லக்கிளி

பட விமரிசனம்

ஓவியராவதற்கும் அந்த ஓவியர் லட்சாதிபதியாவதற்கும் ரிசுக்கலை
மான வழியைக் கண்டுபிடித்துக் கூறியுள்ளார் கதாசிரியர் கலைஞானம்
அவர்கள். ஒரு குயர் வெள்ளைக் காகிதம். அதில் தன் மனங்கவர்ந்த காத
லியின் — அவன் முகத்தையே பார்த்திருக்கக் கூடாது. திரைக்குப்பின்னால்
நிற்கும் அவள் கால்களும் ஒற்றைக் கண்ணுமே தெரிய வேண்டும் —
உருவத்தை வரைய ஆரம்பிக்க வேண்டும். காகிதத்தைக் கசக்கிக் கசக்கிச்
சுற்றிலும் போட்டால் முடிவில் காதலியை அற்புதமான ஓவியமாக வரை
யும் ஆற்றல் வந்துவிடும். அடுத்து தெருவோரத்தில் 'லாண்ட் ஸ்கேப்'
இயற்கைக் காட்சிகள் — பெயிண்டிங்குகளைக் கடைபரப்பி விற்க வேண்டும்
அப்போது உங்களைத் தேடி ஒருவர் வருவார். 'லக்ஷ்மி படம் ஒன்று வேண்
டும். வரைந்து கொடுத்தால் ஐந்து லட்சம் தருகிறேன்' என்பார்.
அடிக்கும் யோகம் உங்களுக்கு. படமும் பணமும் கை மாறும். நீங்கள்
லட்சாதிபதி — எப்படி? சுலபமாக இல்லை? செல்லக்கிளியின் கதாநாயகன்
ராஜாவை இப்படித்தான் பணக்காரராக்கி இருக்கிறார்கள்.
படிதாண்டாப் பாவையாகத் திரைக்குப் பின்னாலிருந்து காதலிப்பவ
ராக வருகிறார் ஸ்ரீப்ரியா. கனவுக் காட்சிகளில் காதலனோடு களிப்பதோடு
சரி. பிறகு கணவனை இழந்து கருப்புப்புடவை காரிகையாகவே படம் முழு
வதும் தோன்றுகிறார்.

இப்போதெல்லாம் ஸ்ரீகாந்த் மாறுபட்ட பாத்திரங்களில் தோன்றுவது
வழக்கமாகிவிட்டது. அசல் வில்லன், துகிலுரிப்பு, ஆகியவை கொஞ்சம்
கொஞ்சமாக விலகிப் போகின்றன. நல்லதுதானே! ஜாக்கி — சிட்டாட்டம்
— ஜகதீசனாக வரும் ஸ்ரீகாந்த் குழந்தை ராதா உயிர் பிழைக்க வேண்டு
மென்று உருகி நடிப்பது பாராட்டுப் பெறுகிறது.

பழைய பேப்பர் வியாபாரி யான ராஜா (விஜய குமார்) ஜானகியைக்
(ஸ்ரீப்ரியா) காதலிப்பதும், ஆசையோடு பரிசம் போட வருவதும் அதற்குள்
அவள் மாற்றான் மனைவி யாவதும் இவர் ஏமாற்றமுடன் திரும்புவதும்
விறுவிறுப்பான கட்டங்கள். விஜயகுமார் நன்றாகவே நடித்துள்ளார்.
குழந்தைகள் ஆண்டல்லவா? செல்வி வந்தனாவின் நடிப்பும் தோற்றமும்
மெச்சும்படியாக உள்ளன. இருதய நோயாளியான குழந்தை அவ்வளவு
தூரம் ஓடிச் சிரமப்பட்டுத் தப்பி இருக்க முடியுமா? வந்தனாவின் நடிப்புப்
படம் பார்ப்போரின் கண்களை ஈரமாக்கி விடும் கட்டங்களும் உண்டு.
கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் வகையில் வண்ணப்படங்கள் அதிகமாக
வந்து கொண்டிருக்கும் இந்த நாளில் இந்தப் படத்தைக் கருப்பு வெளுப்பில்
எடுத்திருப்பதாவது போகட்டும். ஒளிப் பதிவுக் கோளாறு? படம் பளி
ச்சென்று இல்லையே. ஒலிப்பதிவும் சுமார். வசனங்களில் தூயவனைக் கா ...
முடிகிறது. கருணிராஜன் மனோரமா ஹாஸ்யம் ஸோ ஸோ—

கௌசிகன்

# கனவா நிஜமா? 5

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்

நம்பிக்கைத் துரோகத்துக்கு மன்னர் வஜ்ரபாகு எப்படிப் பலியானார் என்பதை ரணமல்லன் நினைக்கிறான். தீவன் அதைத் தன் மனத் திரையில் கண்டான். வீரமும் விசுவாசமும் தந்தவக்ரனை சேனாதிபதியாக உயர்த்தின.

மன்னர் மன்னவா! என் மீது தாங்கள் கொண்டுள்ள இந்த நம்பிக்கைக்கும் தகுதியுடையவனாக நடந்து கொள்ளுவேன்.

தளபதி தந்த வக்ரரே! உம் வீரத்தை மெச்சுகிறோம். மாயாபுரியின் அனைத்துப் படையணிகளுக்கும் உம்மைப் பிரதம சேனாபதியாக்குகிறோம். உமது பாதுகாப்பில் மாயாபுரி மக்கள் பயமின்றி வாழட்டும்.

அதுவே பிரதம சேனாபதியாகப் பதவி ஏற்றுக்கொண்ட இரண்டே ஆண்டுகளில் தந்தவக்ரனின் மனப் போக்கில் மாறுதல் ஏற்பட்டது. மன்னரைக் கொன்று தானே முடிசூடிக்கொள்ளத் திட்டமிட்டான். ஒரு நாள் இரவு மன்னரின் மாளிகைக்குத் தீ வைக்கப்பட்டது!






ராணுவத்தினரையும் வேறு சில அதிபர்களையும் தன் கைக்குள் போட்டுக்கொண்ட தந்தவக்ரன் நிகழ்ந்த மறு நாளே தன்னை மாயாபுரியின் மன்னராகப் பிரகடனப் படுத்திக் கொண்டான். எங்களைப் போன்ற சிலர் எதிர்த்து நின்றோம். ஆனாலும் வஞ்சகமே வென்றது. தந்தவக்ரனை வெறுத்து எதிர்த்து வெளியேறியவர்கள் இன்று மிருகங்களைப் போலவே மலைக் குகைகளில் ஒளிந்து வாழ்கிறோம். இது எத்தனை நாளைக்கு? அந்தக் கொடியவனும் ஒரு நாள் அழியத்தான் வேண்டுமோ?


அன்றிரவு நீலன் தூங்கவில்லை.
...இந்தப் பத்து வருஷங்கள் என் வாழ்வில் என் நினைவுக்கே வராதபடி எப்படிப் போயிற்று? இத்தனையும் நடந்தபோது நான் தூங்கிக் கொண்டே இருந்தேனா...?


தூங்கும் ரணமல்லனை எழுப்பாமல் நீலன், பதுங்கியுள்ள மலைக் குகைக்குள்ளிருந்து வெளிப்பட்டான்.
என் நினைவு எங்கே முடிந்ததோ அங்கேயே நான் மறுபடி போகப்போகிறேன். ஒரு வேளை அந்த இடத்துக்கு நான் போனால், இழந்த பத்து வருடங்களை நான் மறுபடி திரும்பப் பெற முடியுமோ...?


மிகுந்த பிரயாசையின் பேரில், தான் படுத்துத் தூங்கிய அந்த மலைப்பகுதியை நீலன் தேடிக் கண்டு பிடித்தான்.
...இதே இடம் தான். இந்த மலை இடுக்குகளுக்கு இடையே தான் படுத்துக் கண்ணயர்ந்தது நன்றாக நினைவிருக்கிறது. மறுபடி இதே இடத்திலேயே படுத்து உறங்கி இன்றிரவைக் கழிக்கிறேன்..


அன்று படுத்துத் தூங்கிய அதே இடத்தில் அதே போலப் படுத்துக் கொள்கிறான். அச்சமும் குழப்பமும் அவனை ஆழ்ந்த தூக்கத்தில் ஆழ்த்துகின்றன. அப்போது அந்த மலை இடுக்கிலிருந்து மறுபடியும் கசிந்து பரவுகிறது, விசித்திரமான புகை. நீலன் அந்தப் புகையை முகர்ந்து சுவாசிக்கிறான்...


அதிகாலையில் குயில்கள் கூவ கண்விழித்த நீலனின் கண் முன்னே...
என் ஆடுகள்! நிஜம் தானா? என் ஆட்டு மந்தை அப்படியே உள்ளது! காணாமல் போகவில்லை... அப்படியானால்...?
தொடரும்



# பூநாகம்

ராஜேஷ்குமார்

அந்தக் காலியான தீப்பெட்டியை மெதுவாக — மிக மெதுவாகத் திறந்தான் பாம்பாட்டி மங்குனி. அரை அங்குல அளவுக்குத் தீப்பெட்டியின் வாயைத் திறந்து விட்டு — அதைச் சற்றுத் தள்ளி வைத்தான்.

தீப்பெட்டியின் வாயையே உற்றுப் பார்த்தான் பதி. அவனுடைய கண்கள் சிவந்து வெறி பொங்கிப் பளபளத்தன. மெல்லிய குரலில் கேட்டான். ''அது உள்ளாறத்தான் இருக்கா...?''

''அது மெதுவாத்தான் வரும் சாமி... பொசுக்குன்னு வந்துடாது...'' — மங்குனி வாயிலிருந்த புகையிலைச் சாற்றை — விரலிடுக்கில் பாதையமைத்துச் சர்ரென்று வெளியே துப்பினான்.

விநாடிகள் ஊர்ந்தன. தீப்பெட்டியின் வாயையே இருவரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

சரியாக இரண்டு நிமிஷங்கள் கழிந்த பிறகு...

அது மெல்லத் தலைநீட்டியது. மண்புழு அளவு பருமனில் — அதே அளவு நீளத்தில் ஒரு நயா பைசா அளவில் படம் எடுத்துக் கொண்டு — மெல்லிய சீறலோடு வெளிப்பட்டது அந்தப் பூநாகம். தீப்பெட்டியின் மேல் ஊர்ந்தபடி தரையில் இறங்க முயன்றது.

''எப்பப் பிடிச்சது இது?'' — பதி கேட்டான், பூநாகத்தின் மேலிருந்த பார்வையை அகற்றாமல். மங்குனி குச்சியால் அதைச் சீண்டியபடி சொன்னான்.

''தேத்தைக்குத் தான் புடிச்சேன் சாமி...: தாளம்பூவுக்குள்ளார இருந்துச்சு... ரொம்பவும் சாக்கிரதையா புடிக்கோணும்... ஏமாந்து பராக்குப் பார்த்தமோ சுருக் சுருக்குன்னு கொத்திடும்... கடிச்ச அஞ்சாவது மினிட்லே ஆளு நொரை கக்கிப் பொணமாயிடுவான்... ஆமா... ஒனக்கு எதுக்கு சாமி இந்தச் சனியன்?''

மங்குனியின் இந்த எதிர்பாராத கேள்வியால் பதி திடுக்கிட்டான் ஒரு விநாடி. அடுத்த வினாடியே தான் முன்னமே யோசித்து வைத்திருந்த பதிலைச் சொன்னான். ''பாம்புப் பண்ணை ஒன்னு வைச்சிருக்கேன்... அதுலே இந்தப் பூநாகம் மட்டும் இல்லே... என்ன முயற்சி செஞ்சும் இதை என்னாலே புடிக்க முடியல்லே... உங்கிட்ட இருக்கிறதா சொன்னாங்க... அதான் வந்தேன்.. என்ன விலை சொல்றே...?''

மங்குனி பதிலொன்றும் பேசாமல் அந்தப் பூநாகத்தைக் குச்சியால் தீப்பெட்டிக்குள் தள்ளி அதை அடைப்பதில் ஈடுபட்டான். பிறகு, ''நூறு ரூபா ஆகும் சாமி...'' என்றான்.

பதிக்கு உண்மையிலேயே கோபம் வந்தது. ''இதுக்கு நூறு ரூபாயா?''

''என்ன சாமி அப்படி சொல்லிட்டே...: இது சாரையோ, விரியனோ இல்லே... அது எத்தினி வேணும் ஒனக்கு? இனுமாலே புடிச்சுத் தர்றேன்... ஆனா இதிருக்கே பூவுநாகம்.. அபூருவமா கெடைக்கிற சாதி... பூவுக்குள்ளார தேடித் தேடிப் பார்க்கோணும்... உசுரைக் கழட்டித் தனியா எடுத்து வெச்சுட்டுதான் இதப் புடிக்கோணும்... கொஞ்சார ஏமாந்தா ஆளுகாலி... என்னோட உசுரை பணயம் வெச்சுப் புடிச்சது சாமி... இது... என்னோட உசிரு நூறு ரூபா பொறுதுங்களா...?''

''சரி... சரி... அம்பது ரூபா தர்றேன்... எடு...'' பதி அவசரப்பட்டான்.

''வராது சாமி...''

''சரி... அறுபது தர்றேன்.. மேலே பேசாதே...'' — பதி பர்ஸைத் திறந்து பணத்தை எடுத்தான். ஆறு பத்து ரூபாய்த் தாள்களை அவனிடம் நீட்டினான்.

மங்குனி பதில் பேசாமல் — பூநாகத்தைத் தீப்பெட்டிக்குள் தள்ளி அதன் வாயை மூடி — பதியிடம் நீட்டினான்.

''இன்னா இப்படியே தர்றே...? டப்பாவிலே போட்டு அடைச்சுக் குடு...''

''அப்படிச் செஞ்சா பூநாகம் செத்துடும் சாமி... இப்படியே கொண்டு போ... அது அவ்வளவு சுருக்கா வெளியே வந்துடாது... ஊட்டுக்குப் போனதும் மொதசா தாளம்பூ ஒன்னு வாங்கி அதுல உட்டுடு... ரொம்பச் சாக்கிரதையா இருக்கோணும் சாமி...''

பதி அந்தத் தீப்பெட்டியை வாங்கிக் கொண்டான். மேல் சட்டைப்பையில் செருகிக் கொண்டே குடிசையை விட்டு வெளியே வந்தான்.

''பத்திரம் சாமி...''.

''ம்... ம்...'' — என்றவன் மனசுக்குள் கறுவினன்... ''ரேணுகா...! நாளைக்கு உன்னோட கழுத்திலே தாலியா ஏறும்?... ஊ... ஹூ...ம்... இந்தப் பூநாகம்தான் ஏறும்... என்னைக் கட்டிக்க மறுத்த நீ எவனுக்குமே மனைவியாகக் கூடாது...''

பதி அந்த ஒற்றையடிப் பாதையில் வேகமாய் நடந்தான்.

**ப**தினைந்து நாட்களுக்கு முன்.

பதி ரொம்பவும் கொதித்துப் போயிருந்தான். அவன் குடிகாரன்தான். விடிய விடியச் சீட்டாட்டம் ஆடுகிறவன்தான். சபல உணர்வு தட்டும் போதெல்லாம் அப்பாவி கிராமத்துப் பெண்களையும் — அவர்கள் கிடைக்காத போது டவுன் ஹோட்டல் அறைகளையும் நாடுபவன்தான்... இருந்தாலும் ஒரு பெண் அதுவும் அவனுடைய தாய்மாமன் ரங்கதுரை மகள் ரேணுகா — நான்குபேர் எதிரில் பட்டவர்த்தனமாய் — அவனைக் கட்டிக் கொள்ள முடியாது என்று சொல்லி விட்டாளே?

நினைக்க — நினைக்க நெஞ்சு ஆறவில்லை பதிக்கு.

ரேணுகா சொன்னதை எதிர்வீட்டுக் கோவிந்தன் அட்சரம் பிசகாமல் சொன்ன போது எரிமலையானன் பதி.

''வேணுமின்னு என்னெ முடவனுக்கோ... இல்லே குருடனுக்கோ... கட்டிக் குடுங்க... சந்தோஷமா வாழ்க்கையை நடத்தறேன்... ஆன பதி அத்தானுக்கு மட்டும் என்னெத் தராதீங்க... அவருகிட்ட பணம் இருக்கலாம் அளகு இருக்கலாம்... ஆன ஒளுக்கமில்லே... பொம்பளைகளை மதிக்கிற கொணம் இல்லே... எனக்கு அவுரு வேண்டாம்... மீறிக் குடுத்தா எம் பொணம்தா ஒங்களுக்குக் கெடைக்கும்...''

பசு மரத்தில் ஆணி அடித்தாற்போன்ற — அந்த வார்த்தைகள் பதியின் தன்மானத்தைப் பீஸ் பீஸாக்கியது. நினைக்க நினைக்க... வெறி பிடித்தாற் போலானன் பதி. மேலுதட்டில் ரோமம் முளைத்த நாள் முதல் பதிக்கு ரேணுகாவைப் பார்க்கும்போதெல்லாம் உடம்பு சூடேறும்... அளவான உயரத்தில் — பிசிறில்லாமல் — இழைத்த சந்தனக் கட்டையாய் — செழித்த அவள் உடம்பைக் காணும் போதெல்லாம் அவன் கண்கள் செம்மையுறுவதை அவனே உணர்ந்திருக்கிறன்.

அப்பேர்ப்பட்ட அழகுச்சிலை அவன் கையை விட்டு நழுவிப் போவதா? இருபது ஏக்கர் நஞ்சைக்கும் — முப்பது ஏக்கர் புஞ்சைக்கும், தென்னந்தோப்புகளுக்கும் — வீடுகளுக்கும் உரிமையுள்ள அவனை ஒருவிநாடி நேரத்தில் தூக்கியெறிந்து பேசி விட்டாளே...

ரேணுகாவின் வார்த்தைகள் கூரிய பிளேடுகளாய் மாறி — அவனுடைய இதயத்தை அறுத்தன. ரத்தத்தைச் சிந்த வைத்தன.

எனக்கு இல்லாத அந்த ரேணுகா எவனுக்குமே இல்லாமல் போகட்டும்.

ரேணுகாவைச் சந்தேகப்படாத முறையில் தீர்த்துக்கட்ட யோசித்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில்தான்... தென்னந்தோப்பில் கள் குடிக்க வந்த பாம்பாட்டி மங்குணி பதியின் கண்ணில் பட்டான்.

இதோ!...பூநாகத்தை விலை பேசி...அந்தக் காலியான தீப்பெட்டிக்குள் அடைத்துக் கொண்டு... ரேணுகாவின் கல்யாணம் நடக்கவிருக்கும் திருமண மண்டபத்தை நோக்கித் துள்ளல் நடை போட்டான் பதி.

**ப**ஸ்ஸைப் பிடித்து — வியர்க்க வியர்க்கப் பேரூர் போய்ச் சேர்ந்து நடக்கவிருக்கும் கல்யாணச் சத்திரத்தைப் பதி அடைந்தபோது இரவுமணி பத்துக்குமேல் ஆகிவிட்டது.

சத்திரத்து வாசலில் பெட்ரோமாக்ஸ் விளக்குகள் புகைந்து கொண்டிருந்தன. வெற்றிலைச் சாற்றைத் துப்ப வந்த தாய்மாமன் ரங்கதுரை பதியைப் பார்த்ததும் வியப்பால் முகம் மலர்ந்தார்.

''வா... பதி... வா... இப்பதான் வர்றியா... மாப்பிள அழைப்புக்கு வந்திருக்கப் படாதா?''

கஷ்டப்பட்டுப் புன்னகை பூத்தான் பதி. ''வரலாம்னுதான்... நெனெச்சேன் மாமா. ...வழியிலே சிநேகிதரு ஒருத்தர் புடிச்சுட்டாரு... பேசிட்டு வர நேரமாயிடுச்சு...''

''சரி... சரி... உள்ளாற வா ... முகம் கழுவிக்கிட்டுச் சாப்பிடு...''

பதி உள்ளே நுழைந்தபடியே சொன்னன். ''வர்ற வழியிலேயே ஒரு ஓட்டல்லே சாப்பிட்டுட்டேன் மாமா... நாளைக்கி காத்தாலே டிபன் சாப்பிட்டா போதும்... மாப்பிள்ள எங்க மாமா?''

ரங்கதுரை பெருமையோடு சிரித்தார். ''மாப்பிள்ள... படிச்சவரு... அவரோட சிநேகிதக் காரங்களெல்லாம் படிச்சவங்களாம்... அவங்களுக்குச் சத்திரத்து வசதி



போதாதாம்... எதிர்த்தாப்பில இருக்கிற ஓட்டல்ல மூணு ரூம் எடுத்து அவுங்களுக்குக் கொடுத்திருக்கோம்... நீயும் வேணுமின்னு அங்கேயே தங்கிக்கலாம்...''

''ம்... ம்...'' என்றபடி பதி சுற்றிலும் பார்வையை ஓடவிட்டான்.

அது சிறிய சத்திரம்தான். கூட்டமும் குறைவாகத்தான் இருந்தது. பெண்கள் பட்டுப் புடவைகளோடு சிறு சிறு கும்பல்களாக உட்கார்ந்தபடி பேசிக் கொண்டிருந்தார்கள்.

''முகூர்த்தம் எத்தினி மணிக்கு மாமா?''

''அஞ்சிலிருந்து ஆறுக்குள்ளாற... முகூர்த்தம் முடிஞ்சதும் போயிடாதே! எல்லாத்துக்கும் நீ இருந்து முடிச்சு வெச்சுட்டுத்தான் போகணும்...''

''ஆகட்டும் மாமா... இருந்து எல்லாத்தையும் முடிச்சு வெச்சுட்டே போறேன்'' —பதி விஷமத்தனமாய்க் கூறிக்கொண்டே பக்கவாட்டில் தெரிந்த அறையை எட்டிப் பார்த்தான்.

மஞ்சள் புடவையில் — அழகுப் பிம்பமாய் ரேணுகா தெரிந்தாள். சுற்றிலும் அவள் வயதையொத்த பெண்கள். சிரிப்பு..., கிண்டல்..., கும்மாளம்...

பதிக்கு வயிற்றில் அமிலம் வார்த்த மாதிரி இருந்தது.

''ரேணுகா இந்த ரூமிலேதான் இருக்காளா மாமா?''

''ஆமா... ரேணுகாவைக் கூப்பிடட்டுமா?''

''வேண்டாம்... மாமா..., நாளைக்கு காத்தாலே பேசிக்கலாம்...''

''மாப்பிள்ளையோட ரூம்லேயே தங்கிக்க பதி... கூட ஒரு பையனை அனுப்பட்டுமா?''

''வேண்டாம் மாமா... நானே போய்க்கிறேன்...''

பதி திரும்பினான். பக்கவாட்டில் மீண்டும் தெரிந்த ரேணுகாவின் அறையைப் பார்த்தான். ரேணுகாவின் தலைக்கு மேல் — சுவரில் — இருந்த ஆணியில் — ஊசலாடிக் கொண்டிருந்த அந்தப் பூமாலையை வெறித்தான்.

**மா**ப்பிள்ளை ரகுவுக்கும், அவனுடைய நண்பர்களுக்கும் ஒதுக்கி விடப்பட்டிருந்த அந்த ஹோட்டல் அறையில் உற்சாகமும் கும்மாளமும் வழிந்தன.

ரேணுகாவுக்குக் கணவனாக வரப் போகிற மாப்பிள்ளை கண்ணுக்கு லட்சணமாய் இருப்பதை ஒருவித எரிச்சலோடு உணர்ந்தான் பதி.

சீட்டாட்டத்துக்கு எல்லோரும் ஆயத்தமானார்கள்.

''நீங்களும் ஒருகை உட்காருங்களேன்..''—யாரோ பதியை அழைத்தார்கள்.

''இல்லீங்க... எனக்கு இதெல்லாம் பழக்கமில்லீங்க...'' — என்று சொல்லியபடி ஒதுங்கிக் கொண்டான் பதி. சத்திரத்திலிருந்து ஓட்டலுக்கு வரும் வழியில் — எதிர்ப்பட்ட சந்து ஒன்றில் திருட்டுத்தனமாய்க் கிடைத்த சாராயத்தை அளவுக்கு அதிகமாகக் குடித்ததின் விளைவு — பதிக்கு லேசாகக் கண்ணயர்ந்து கொண்டு வந்தது. எவ்வளவு குடித்தாலும் புத்தியில் மட்டும் தடுமாற்றம் வராது பதிக்கு.

சட்டையின் மேல் பையில் இருந்த தீப் பெட்டியை எடுத்துப் பார்த்தான். சரி பார்த்துக் கொண்டான். இரண்டுமணி நேரத் தூக்கம். ஒரு மணிக்கு எழுந்து சத்திரத்துக்குப் போக வேண்டியது... ரேணுகாவின் அறைக்குள் சகஜமாக நுழைய வேண்டியது. பூமாலையின் கழுத்துப் பகுதியில்



பூநாகத்தை விட்டுவிட்டு மறுபடியும் ஓசைப் படாமல் அறைக்குத் திரும்பி வந்து படுத்துக் கொள்ள வேண்டியது.

விடியற்காலையில் — அந்த மாலை ரேணுகாவின் கழுத்தில் விழுந்ததும்

பூநாகம் ஆவேசமாய்ப் பல்லைப் பதிக்க —

நினைக்க — நினைக்க...

இதயம் குளிர்ந்து கொண்டு வந்தது பதிக்கு.

தலைக்குக் கைகளை வைத்துக்கொண்டு கீழே படுத்தான் பதி.

"டேய்! எனக்கொரு சிகரெட்..."

"இப்பத்தானேடா குடிச்சே..."

"அது நமுத்துப் போன சிகரெட்... ஃபிரெஷ்ஷா... அந்தப் பாக்கெட்டை உடை..."

"ஓசி சிகரெட்டுன்னு இப்பிடியா? உடம்புக்கு ரொம்பவும் கெடுதல் பிரதர்..."

"அட்வைஸை நாளைக்குச் சொல்லு... முதல்லே சிகரெட்டை எடு..."

—ஆளுக்கு ஆள் கைநீட்ட ஒரே நிமிஷத்தில் பாக்கெட் காலியானது.

"தீப்பெட்டி?"

"எங்கிட்டே ஆயிடுச்சு..."

"ரகுவோட பேண்ட்ல பாரு..."

அந்த நண்பன் வாயில் சிகரெட்டோடு ரகுவின் பக்கமாய்த் திரும்ப —

தரையில் மல்லாந்து படுத்தபடி — தூக்கத்தில் ஆழ்ந்திருந்த பதி கண்ணில் பட்டான். கூடவே அவன் சட்டைப்பையில் இருந்த அந்தத் தீப்பெட்டியும் பிதுக்கிக் கொண்டு தெரிந்தது.

"நாம இங்கே தீப்பெட்டிக்காக லோ லோன்னு அலையறோம்... ஒரு பிரதர் தன்னோட ஜேபியிலே அத வெச்சுக்கிட்டுச் சயனம் பண்றார்.. இங்கே!"




"எடு... எடு... தீப்பெட்டியை எடுத்தா அவர் கோவிச்சுக்க மாட்டார்... அவரு பொன்னு வூட்டைச் சேர்ந்தவருதான்..."

அந்த நண்பன் எழுந்தான். தளர்ந்து போன வேஷ்டியை இறுக்கிக் கொண்டே பதியை நெருங்கினான். பதியருகே குனிந்து — அவன் தூக்கத்திற்கு இடையூறில்லாமல் மெல்ல அந்தத் தீப்பெட்டியை உருவினான்.

"குச்சிய வேஸ்ட் பண்ணாதே... ஒரே குச்சியால பத்தவை..."

"ம்... ம்..." அந்த நண்பன் தீப்பெட்டியின் வாயைத் திறக்க—அதன் ஆரம்ப வாய் வெறிச்சிட...

"சை... காலித் தீப்பெட்டி... மனுஷன் சரியான கஞ்சனா இருப்பான் போலிருக்கே... காலித்தீப்பெட்டியைக் கூட விடாம பத்திரமா வெச்சுக்கிட்டிருக்கார்..."

"சரி... சரி... அதை அவர் பாக்கெட்டிலேயே வெச்சுட்டு ரகுவோட பேண்ட்ல பாரு..."

அவன் அரை குறையாய்த் தீப்பெட்டியின் வாயை மூடிப் பதியின் சட்டைப் பையில் செருகிவிட்டு — ரகுவின் பேண்ட்டை நோக்கிப் போனான்.

"அது" தீப்பெட்டியின் உள்வாயினின்றும் ஊர்ந்தது.

சற்றுமுன்வரை காற்றுக்காகத் தவித்த அது இப்போது காற்று வருவதை உணர்ந்தது... தன் சின்னஞ்சிறு உடலை நெளித்து... நெளித்து முன்னோக்கி ஊர்ந்தது. ஆவேசமாய் ஊர்ந்தது.

தீப்பெட்டியின் வாய் சற்றே திறந்தபடி இருந்த அந்த நுழைவில் — சரேலென நுழைந்து வெளியே வந்தது. தீப்பெட்டியினின்றும் வழுக்கிக்கொண்டு — சட்டைப் பையின் உள்புறத்தில் விழுந்தது. கோபாவேசமாய் மேலே ஏற முயன்று —

முயன்று —

முயன்று — முடியாமற்போகவே தன் சின்னஞ்சிறு படத்தைச் சீற்றத்துடன் விரித்தபடி அலைந்தது.

பதிக்கு விழிப்புத் தட்டியது.

எழுந்தான். அறையில் சாம்பல் இருட்டு படிந்திருந்தது. கண்களைத் தேய்த்து விட்டுக் கொண்டு தன் கடிகாரத்தைப் பார்த்தான். ரேடியத்தின் ஒளியில் முட்கள் ஒளிர்ந்தன. மணி மூன்று.

சீட்டாட்டக் கும்பல்கள் கிடைத்த இடங்களில் உடம்புகளைச் சுருக்கிக் கொண்டு தூக்கத்தில் ஆழ்ந்திருந்தன. குறட்டையொலிகள் அறையெங்கும் வியாபித்திருந்தன.

இனி நம் வேலையை ஆரம்பிக்க வேண்டியது தான்.

பதி எழுந்து நின்றான். ரேணுகாவின் அறையில் நிச்சயமாய் எல்லோரும் தூங்கிக்கொண்டு தான் இருப்பார்கள். காரியத்தை முடிக்க ஒரு நிமிஷம்கூட ஆகாது. தீப்பெட்டியின் வாயைத் திறந்து பூமாலையின் கழுத்துப் பகுதியில் வைக்க வேண்டியது... பூநாகம்

பூவாசத்தால் இழுக்கப்பட்டு விநாடி நேரத்தில் பூமாலைக்குள் நுழைந்துவிடும்...

பிறகு... பிறகு...

**கோ**பமாய் அது அலைந்தது.

மேலே ஏற முயன்று — வழுக்கி கீழே விழுந்து — தீப்பெட்டியின் மீது மறுபடியும் ஏறி... உருண்டு...

என்ன இது புது வாசனை! அது நின்றது...

பதியின் சென்ட் தடவிய கைக்குட்டை கண்ணில்பட்டது.

ஒரே விநாடிதான்!

அதனுள் சரேலென்று நுழைந்து புகுந்து கொண்டது.

பதி பாக்கெட்டினுள் கையை விட்டான். தீப்பெட்டி சிக்கியது. எடுத்து இடது உள்ளங் கையில் அடக்கிக் கொண்டான். அறையை விட்டு வெளியே வந்தான். அந்தச் சின்னஞ்சிறு ஹோட்டல் முழுக்க நிசப்தம்.

ஓட்டலைவிட்டு வெளியே வந்து சத்திரத்தை நோக்கி மெல்ல நடைபோட்டான். சுவர்க்கோழிகள் கோரஸாய் ரீங்கரிக்க... எங்கோ தொலைவில் நாயொன்று ஊளையிட்டது.

சத்திரத்து வாசலை நெருங்கியபோது — பெட்ரோமாக்ஸ் விளக்குகளும் அணைந்து போயிருந்தன. சத்திரத்து உட்புற ஹாலில் விளக்கெரிந்து கொண்டிருந்தது.

உள்ளே நுழைந்தான் பதி.

ஜமுக்காள விரிப்புக்களில் குழந்தைகளும், பெண்களும் தாறுமாறுகத் தூங்கிக் கொண்டிருந்தனர். ரேணுகாவின் அறையைப் பார்த்தான். ஜீரோ வாட்ஸ் விளக்கு பலஹீனமாய் எரிந்து கொண்டிருந்தது. அறைக்கதவு ஒருக்களித்துச் சாத்தப்பட்டிருந்தது.

அறையை நோக்கி மெல்லப் போனன். கதவை நெருங்கி அதைத் தள்ளப்போகும் நேரம் உள்ளே பேச்சுக்குரல் கேட்டது.

''இப்பவே குளிச்சுட்டு வந்துட்டா பரவாயில்லே... அலங்காரத்தை ஆரம்பிச்சுடலாம்...'' யாரோ சொல்ல ரேணுகா சிணுங்கினள். ''இந்தக் குளிரிலா?...''

''குளிரைப் பார்த்தா முடியுமா...? ம்... புறப்படு... குளிச்சிட்டு வந்துடலாம்...''

அறையில் ட்யூப் லைட் பளிச்சிட்டு எரிய ஆரம்பித்தது. பதி சரேலென்று ஒரு தட்டியின் மறைவில் ஒதுங்கினன்.

இரண்டு நிமிடங்களில் —

ரேணுகாவும் இரண்டு பெண்களும் — டவல், சோப் சகிதம் வெளியே வந்தனர். பதி மூச்சை அடக்கிக் கொண்டு நின்றிருந்தான்.

அவர்கள் மறைந்ததும் பரபரவெனச் செயல் பட்டான். அறைக்குள் நுழைந்து—தீப்பெட்டியின் வாயைத் திறந்து, பூமாலையின் கழுத்துப் பகுதியில் வைத்துவிட்டு அதே வேகத்தில் வெளியே வந்தான்.

அந்தக் குளிரிலும் அவனுக்கு வியர்த்தது.

முகமெங்கும் முத்து முத்தாய் வியர்வைத் துளிகள். சத்திரத்தைத் தாண்டி வேகமாய் நடந்து — அந்தக் குளக்கரையோரமாய் நடந்தான். அந்த அறிவிப்பு அவன் கண்ணில் பட்டது.



மாணவன் 1: ''நான் எப்பொழுதாவது கிளாசை கட் செய்து விட்டு சினிமாவுக்குப் போவேன்!''

மாணவன் 2: ''நான் எப்பொழுதாவது சினிமாவைக் கட் செய்து விட்டு கிளாசுக்குப் போவேன்!''

— என். பத்மாவதி





குளத்தில் முதலை இருக்கிறது. இதில் இறங்கி யாரும் குளிக்காதீர்கள்!

பொது மராமத்துத் துறை

பதி அதைப் பார்த்துப் புன்னகை பூத்தபடி நடந்தான்.

முதல் பஸ்ஸைப் பிடித்து ஊர் போய்ச் சேரவேண்டியதுதான். ஊர்போய்ச் சேர்வதற்குள் ரேணுகா பிணமான செய்தி வந்தாலும் வரும்... பூநாகம் இந்நேரம் நுழைந்திருக்கும். ரேணுகா குளித்து — அலங்காரம் பண்ணிய பிறகல்லவா பூமாலையைப் போடுவார்கள்...?

சிந்தனைகள் — மூளையைக் குடைய... குடைய...

பரபரப்பில் முகம் வியர்த்தது... சொத... சொதவென்று...

அந்தக் கைக்குட்டையை எடுக்க அவன் முடிவு செய்து வலது கையை உள்ளே நுழைத்த அதேநேரம்...

ஆள்காட்டி விரலிலும், நடுவிரலிலும் பழுக்கக் காய்ச்சிய ஊசிகள் பாய்ந்தாற்போல் துடித்துக்கொண்டு கையை உதறினன் பதி. அது விரலில் சுற்றிக்கொண்டு கீழே விழ மறுத்தது... மீண்டும் மீண்டும் அது பற்களை ஆவேசமாய்ப் பதிக்க...

குளக்கரையின் முதல் படிக்கட்டோரமாய்ச் சரிந்தான் பதி... .தொடர்ந்து இதர படிக்கட்டுகள் அவனை உருட்ட.... அந்த ஆள் விழுங்கிக் குளம் அவனை ஆவேசமாய் அள்ளிக் கொண்டது...

**ப**தியின் தாய்மாமன் ரங்கதுரை யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்தார்.

''முகூர்த்தம் முடிஞ்சு எல்லாரும் டிபனையும் சாப்பிட்டுப் போயாச்சு... இந்தப் பதி இன்னமும் காணுமே... விரோதத்தை மனசுலே வெச்சுக்காமே கல்யாணத்திற்கு வந்திருக்கானேன்னு ரொம்பவும் சந்தோஷப் பட்டுக்கிட்டு இருந்தேன்... மறுபடியும் பகையை நெனச்சு ஊருக்குப் போயிட்டானோ என்னவோ...''

அவருடைய குரலில் உண்மையான வருத்தம் தொனித்தது.

மினி மர்மத் தொடர்கதை

# நரிக்கொம்பு

5

'கிருஷ்ணவேணி'

நீல் சித்தப்பா ஏதும் சொல்லி விடக் கூடாதென்ற அவசரத்துடன் அந்த அழகி — தலை கவிழ்ந்தபடி சரிந்த நிலையிலிருந்த அநீதா — சோர்வுற்ற குரலில் சொன்னாள். —"பரவாயில்லை சித்தப்பா, அவர் என்னுடன் தனிமையில் பேசட்டும்" என்றவாறே நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். கொடியுடல். உருவி விட்டாற்போன்ற ஒத்த அழகு. வெட்டி விடப்பட்டதலை மயிர் முன்புறம் விழுந்து முகத்தின் ஒரு பகுதியை மூடிக் கொண்டது. ஆனால் அதை அவள் ஒதுக்கிக் கொள்ளவில்லை. அவள் கண்கள் மூடி இருந்தன. ஆயாசமா?

"நான் வெளியேதான் இருக்கிறேன் அநீதா. நினைவிருக்கட்டும்" என்று கூறியபடி கதவை ஓசையுண்டாகச் சாத்திக் கொண்டு வெளியே போனார் பெரியவர். அவள் ஹரியைப் பார்த்து "உங்களுக்கு ரமேஷின் முடிவு அதிர்ச்சியும் வியப்புமாயிருக்குமென்று நினைக்கிறேன்" என்றாள். ஹரி பதிலேதும் கூறவில்லை. ஆனால் ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது அவனிடமிருந்து. அநீதா தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு குரல் நடுங்கக் கூறினாள். "அவருக்கு நெருங்கியவர்— அவருடைய மனிதர்கள் என்று உங்களைத் தான் ரமேஷ் என்னிடம் கூறி இருந்தார். ஆகவே நான்தான் உங்கள் விலாசத்தை ரயில்வே அதிகாரிகளுக்குத் தந்தேன்."

"அந்த விபத்து நிகழ்ந்தபோது யாராவது பார்த்தார்களா?"

"இல்லை... தண்டவாளத்தில் இவர் விழுந்து கிடப்பதை எதிர்த்திசையில் வந்து கொண்டிருந்த எஞ்சின் டிரைவர்தான் பார்த்திருக்கிறார். ஆனால் மிக அருகே வந்தபிறகு பார்த்ததால் வேகமாக வரும் வண்டியை உடனே நிறுத்த முடியவில்லை அவரால்." அவள் இதைக் கூறிய விதம் ஏதோ போலிருந்தது ஹரிக்கு — எவ்வித உணர்ச்சியுமில்லாமல் மனப்பாடம் செய்யப் பட்ட பகுதிகளைக் கவனமாக ஒப்புவிப்பது போல. ஒருவேளை அந்தச் சம்பவத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சியினாலிருக்கலாம். பலரிடமும் இதையே திரும்பத் திரும்ப விவரிப்பதினாலும் அப்படி இருக்கலாம் — இப்படி எண்ணினான் ஹரி.

"ரமேஷ் அப்போது தனியாக இருந்தானா?" ஹரி கேட்டான்.

"அப்படித்தானிருக்க வேண்டும். 'ஒரே புழுக்கமாக இருக்கிறது. காற்றையே காணோமே' என்று அலுத்துக் கொண்டார்."

ஹரி அவள் பார்வையைத் தன் பார்வையோடு இணைக்க முயன்றான். "ம்... ரமேஷ் அப்போது மது அருந்தி இருந்தானா?"

"இருக்க வேண்டும்..."

"நிறையவே குடித்திருந்தானா...?"

"எனக்குத் தெரியாது... நான் சீக்கிரமே படுத்துக் கொண்டு விட்டேன். வண்டியில் ஏறியதிலிருந்து எனக்குத் தலைவலி. அதிகாரிகள் வந்து நடந்ததைக் கூறிய பிறகுதான் எனக்கே தெரியும்."

அநீதாவின் குரலில் அவள் விழிகளில் அவள் பார்வையில் ஏதோ முரண்பாடு தெரிந்தது.

"ரமேஷ் தன் திருமணத்தைப் பற்றி எனக்குத் தெரிவிக்காதது ஆச்சரியத்தை அளித்தது!" ஹரி இதைக் குற்றம் சாட்டும் முறையில் கூறினான்.

"எங்கள் திருமணம் திடீரென்று குதிர்ந்ததினால் உங்களுக்குத் தெரிவிக்க இயலாதிருந்திருக்கும். என்னைப் பார்த்ததுமே தன்னுடையவளாக்கிக் கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வந்து விட்டார் உங்கள் நண்பர்."

அநீதாவின் இந்த விளக்கம் என்னமோ போலிருந்தது ஹரிக்கு. சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான். அணைந்த குச்சியைப் போட ஆஷ் டிரேயைப் பார்த்தான். அது அவளுக்கு மறுபக்கத்தில் ஒரு டீப்பாயிலிருந்தது. அதில் போட அவள் முகத்துக்கு முன்னால் எழும்பிக் குனிந்து — அவள் மூச்சுக்காற்று மேலே படும் இடைவெளிக்கு அருகே — போக வேண்டும். அப்படிச் செயல்பட்டபோது அவள் கொஞ்சமும் சலனப்படவில்லை. ஒதுங்கிக் கொள்ளவில்லை. இது ஹரிக்குத் திகைப்பும் வியப்புமாக இருந்தது. சட்டென்று ஏதோ உணர்ந்தப்பட்டவனாக அவள் விழிகளுக்கு நேரே ஒளிரும் தன் சிகரெட்டை நீட்டினான். அப்போதும் அவள் சிலிர்த்துக் கொண்டு சலனப்படவில்லை. அவள் இமைகள் படபடக்கவில்லை. சிகரெட்டின் வாசனையாலோ அல்லது நிலவிய மௌனத்தினாலோ அவள் உள்ளுணர்வில் ஏதோ ஒருவித சமிக்ஞை ஏற்பட்டிருக்க வேண்டும். "நான் குருடி... பார்வையற்றவள். உங்களுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன்" என்றாள். சோர்வும் விரக்தியும் விரவிக் கிடந்தன அவள் குரலில்.

"தெரியாது..." அதிர்ச்சி ஹரியின் குரலை ஆட்கொண்டது.

கண்பார்வை இல்லாதவளையா தன் மனைவியாக்கிக் கொண்டான் ரமேஷ்? அந்தயியான அநீதாவை இப்போது வித்தியாசமான உணர்வுகளோடு அவன் தன் பார்வையால் வருடினான்.

"பழக்கத்தின் காரணமாக என்னால் இந்தப் பார்வையற்ற நிலையைச் சமாளிக்க முடியும்..." என்ற அநீதா சற்றே பரபரப்புடன் "சிகரெட் கொளுத்திய குச்சியை நன்றாக அணைத்து விட்டுத் தானே ஆஷ் டிரேயில் போட்டீர்கள்?" என்றுக் கேட்டாள்.

"ஆமாம்... ஏன் இப்படி உங்கள் குரலில் ஒரு நடுக்கம்?" வியப்புடன் கேட்டான் ஹரி.

"சரியாக அணைக்காத குச்சியினால், ஒரு சமயம் நான் அமர்ந்திருந்த அறையில் தீ பரவி விட்டது. நாலாப்பக்கமும் திகுதிகுவென்று எரியும் நெருப்பின் நடுவே நான்,

காதல் மணத்தை நுகர முடிகிறது.. அதன் தவிப்பை உணர முடிகிறது. ஆனால் அதனின்று தப்பி வெளியேற எந்தப் பக்கமாகப் போக வேண்டுமென்று தெரியவில்லை...''

அநீதாவின் உடல் அந்தக் கடந்தகால நினைவினால் நடுங்கலாயிற்று. 'தீவிபத்தில் சிக்குபவர்களே தடுமாறிப் போவார்கள். அதுவும் பார்வையற்றவரானால் பரிதாபம்தான். கணவனைப் பிரிந்த துயரத்தின் சாயலைத் துளியும் வெளிப் படுத்தாதவள்: எப்போதோ நிகழ்ந்ததோர் தீவிபத்தின் நினைவிலே இவள் உடல் என்னமாக ஆடுகிறது பீதியினால்? வினோதமான, வித்தியாசமானப் பெண்' என்று எண்ணியவாறே ''பயப்படாதீர்கள் அநீதா...'' என்று அவள் நடுங்கும் தோள்களை ஆதரவுடன் தொட்டு அழுத்தினான் ஹரி. அவன் ஸ்பரிசத்தினால் ஒரு துள்ளலுடன் குலுங்கிய அவள் அடுத்த விநாடியே தன்னை சுதாரித்துக்கொண்டவளாக அமைதியானாள். ஹரி அவள் முகத்தில் வந்து விழுந்திருந்த கேசத்தை ஒதுக்கி விட்டான். மிருதுவான மணம் வீசியது. முன்னுச்சியை நேர் செய்யும் போது அவள் உடல் விரைப்பாகி இறுகியதை உணர்ந்தான் ஹரி. கதவு திறக்கப்படும் ஒலியோ, ஆள்வரும் அரவமோ கேட்கவில்லை. ஆனால் இவர்களுக்குப் பின்னால் சித்தப்பாவின் குரல் கேட்டது. ''மிஸ்டர் ஹரி, அநீதாவின் துக்கத்தை ஆறுதல் மொழிகளால் குறைத்த உங்கள் நல்ல மனத்தைப் பாராட்டுகிறேன். இப்படி வந்து அமருங்கள்'' — பாராட்டிலும் அந்த மிருதுவான குரலிலும் ஏதோ ஓர் அசாதாரணத்தை உணர்ந்தான் ஹரி. 'அநீதாவைத் தான் தொட்டதை விரும்பவில்லையோ இந்த மனிதர்?' ஒரு விநாடி அதே நிலையில் — அநீதாவை ஸ்பரிசித்தவாறே இருந்த ஹரி, பிறகு ஒரு குழந்தையைத் தட்டுவதுபோல அவள் தோளில் தட்டிவிட்டு... ''மிஸஸ் ரமேஷ் மிகவும் அதிர்ந்து போயிருக்கிறார்கள்'' என்றான்.

தன் பதில் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்டான் ஹரி. ''மேற்கொண்டு ஆக வேண்டிய சம்பிரதாயச் சடங்குகளை கவனிக்கலாமா?'' என்றார் சித்தப்பா.

''கவனிக்க வேண்டியதுதான். ரமேஷின் அஸ்தியைக் கங்கையில் கரைக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம்'' என்றான் ஹரி.

அநீதா ஏதும் சொல்லவில்லை. எவ்வித உணர்வையும் வெளியிடவில்லை.

''நாங்கள் இங்கு சில நாள் தங்க வேண்டி இருக்கும். நான் இந்த ஹோட்டல் அறையிலேயே தங்கிக் கொள்ளுவேன். ஆனால் அநீதா — அவள் தன் கணவன் வாழ்ந்த வீட்டில் தங்க விரும்புகிறாள். அசட்டு ஆசை.. ஆனால்...'' அவர் முடிக்காமல் தயங்கினார்.

அவர் எதிர்பார்ப்பைப் புரிந்து கொண்ட ஹரி சட்டென்று கூறினான். எங்கள் 'அபார்ட்மெண்ட்' தான் ரமேஷின் இல்லம். மிஸஸ் ரமேஷ் தன் கணவனான என் நண்பன் வாழ்ந்த அறையில் தங்க விரும்புவாரானால் நான் மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன். சமையலையும் வீட்டையும் கவனித்துக் கொள்ளும் ஸோனு என்கிற மூதாட்டி எங்களுடனேயே இருப்பவள். அநீதா கவலையின்றி அங்கு இருக்கலாம்.''

''ரொம்ப மகிழ்ச்சி, ரொம்ப மகிழ்ச்சி! பரந்த மனசு உங்களுக்கு'' என்றார் பெரியப்பா. அவர் பேச்சு, பாராட்டு, மகிழ்ச்சி எல்லாமே ஏதோ சொல்லி வைத்ததுபோலத் இட்டமிட்டுப் பேசுவது போலச் செயற்கையாகத் தோன்றியது ஹரிக்கு.

''அநீதா உன் பிரச்னை எளிதாக முடிந்துவிட்டதினால் இனி நாம் மேலே ஆகவேண்டிய காரியங்களைத் துரிதமாகக் கவனிக்கலாம் இல்லையா?'' என்றார் அவர்.

(தொடரும்)



(நுங்கம்பாக்கம் வள்ளுவர் கோட்டம். பொறுமையிழந்தவனாக, வாக உலவிக்கொண்டிருக்கிறான். அவன் பார்வை, பஸ் ஸ்டாண்டில் மேய்கிறது.)

வாக (முணுமுணுக்கிறான்): '' காதல் என்றாலே இப்படித்தான் போலிருக்கு.: இவளுக்கு வெயிட் பண்ணியே, என் வெயிட் குறைஞ்சுடும் போல் இருக்கு!...சே!

வாகவி (வந்து கொண்டே): என்ன முணு முணுப்பு? ஏதாவது குறள் நெட்டுருப் பண்றீங்களா?

வா: ஹப்பாடி!...வாகவி! நெட்டுருப் பண்ணல்லே. திருக்குறளிலே மூன்றாவது பால் படிச்சிட்டிருந்தேன்... (குறும்பாகச் சிரிக்கிறான்.)

வாகவி: ஓஹோ....அப் பால் கல்யாணத்துக்கு அப்பால்! நினைவிலே இருக்கட்டும்!

வாக: ஏதேது... கடற்கரையிலே பேசினால், கண்ணகி அடிக்க வர்ற மாதிரி சிலம்போட நிக்கறாள்! இங்கே வரச் சொன்னால், உன் அதிகாரம் பலமாக இருக்கே!

வாகவி: ஒண்ணா ரெண்டா? வள்ளுவர் கோட்டத்திலே அதிகாரம் எவ்வளவு இருக்கு தெரியுமா?

வாக: கோயில்லே பிராகாரம் தெரியுமே தவிர, இங்கே எவ்வளவு அதிகாரம்னு தெரியாது.

வாகவி: வெட்கம். வெட்கம். திருக்குறளிலே எவ்வளவு அதிகாரம் இருக்குன்னு தெரியாதா? சே.

வாக: ஸ்கூல்லே படிக்கச்சே, நான் அந்தக் கேள்வியை 'சாய்ஸ்'லே விட்டுட்டேன். ஆனா விடு! இப்ப நமக்கு சாய்ஸ் ரொம்பக் கம்மி!

வாகவி: அதனால்தான் குரல் கம்மியிருக்கு! என்ன ஆச்சு?, டிரான்ஸ்ஃபர் விஷயம்?

வாக: ....எங்க ஆபீஸ் மானேஜர் ஆராவமுதன் மனசு வெச்சா நடக்கும். அவரை மடக்க என்ன வழி?

வாகவி: அவர் மனசு என்ன ஃபோல்டிங் டைப்பா!

வாக: மனுஷன் ரொம்பக் கறார் பேர்வழி.

வாகவி: அதான் தகராறு பண்றாரா?

வாக: நீ ஒரு அவஸ்தை. ஜோக் அடிக்கிறே! பம்பாயிலே உத்தியோகம்னு ரொம்ப சிரமம்.

வாகவி: எவ்வளவு நாளைக்கு இருக்கும்?

வாக: இது என்ன, ஜுரமா, இருமலா, இத்தனை நாளைக்குன்னு சொல்றதுக்கு! குறைஞ்சது அஞ்சுவருஷம் நீட்டிவிடுவான்.

வாகவி: என்னது?

வாக: ... ச்சு... ஜெயில் தண்டனை மாதிரிதான். பாஷை தெரியாத ஊர், சாப்பாட்டுக்குக் கஷ்டம்... ஹோட்டல்லே சாப்பிடணும்.

வாகவி: பேசாமல் கல்யாணம் பண்ணிண்டு போயிடறதுதானே!

வாக: பேசாமல் எப்படி? மந்திரம் சொல்ல வேண்டாம்? நீதான் கல்யாணத்துக்குச் சம்மதிக்க மாட்டேங்கறியே!

வாகவி: நான் என்ன பண்றது? எங்க ஆபீஸ்லே அப்படி ஒரு கண்டிஷன்! கல்யாணம் பண்ணிண்டா, வேலையை ராஜினாமா செய்யணும்.

வாக: வர்ற ஞாயிற்றுக்கிழமை மானேஜரை சாப்பிடக் கூப்பிட்டிருக்கேன். ஏதாவது பண்ண முடியுமான்னு பார்ப்போம். அவருக்கு ஏதாவது வீக்னஸ் இருக்காதா! ம்... வாகவி... உனக்கு இந்த ஷிபான் ஸாரி,,, வழுவழுன்னு... (தொடுகிறான்)

# ஊதற சங்கை ஊதியாச்சு.

பாமா கோபாலன்



வாகவி: (சட்டென்று கையைத் தட்டி) ''ஸ்... இதென்ன கெட்ட பழக்கம்? தொட்டுப் பேசறதுன்னு... ம்... எல்லாம் கல்யாணத்துக்கு அப்புறம்!

வாக: சரி. சரி, வா. அந்தப்புரம் போகலாம்!

வாகவி: பலே. அந்தப்புரமா.,, என்ன அரச பரம்பரையா?

வாக: ... தொடப்படாது, பேச்சிலே கூடாது... கஷ்டம்டா சாமி! வா... அந்தப் பக்கமா போய், மாடிக்குப் போகலாம்!.

2

(வாகதேவன் வீடு. மயிலாப்பூர் கற்பகாம்பாள் நகர். ஞாயிறு. காலை சுமார் பதி





ஒரு மணி. மானேஜர் ஆராவமுதன் சாப்பிட வந்திருக்கிறார்.)

ஆரா: ...வாசு... நான் ரொம்ப ரிசர்வ்டு டைப்.

வாசு: ...எல்லா சினிமாவுக்கும் ரிசர்வ் பண்ணிட்டுத் தான் போவீங்களா!

ஆரா: ஹ... ஹ் ...ஹா! ஜோக்கா!. சரி... ம். அடுத்த மாதம் பம்பாய் போய்டுவீங்க!

வாசு: ... ஆ... மா... போகணும்... ஸார்... இப்ப... பழ ஜூஸ் சாப்பிடுங்களேன்... 'அபிடைஸர்' மாதிரி...

(பக்கத்துப் போர்ஷன் பரமசிவம், திண்ணையிலிருந்து கா... கா... என்று குரல் கொடுக்கிறார்! உரத்த குரலில் ரிபீட் வேறே!)

வாசு: (மனதுக்குள்) ... சட்! இந்தப் பரமசிவத்துக்கு மனசுலே கே. பாலசந்தர்னு நினைப்பு. நான் இங்கே மானேஜர்கிட்டே குழைவாப் பேசி, ஜூஸ் கொடுத்தால், 'கா, கா'ன்னு குரல் கொடுக்கிறார்!... சனியன்...

ஆரா: ... என்ன வாசு... திடீர்னு... காகம், சனியன்னு முணுமுணுக்கிறீங்க...?

வாசு: அது உங்கள் காதுலே விழுந்துடுத்தா!... வந்து ஸார்... சனீஸ்வரன் வாகனம் காகம். அதைப் ப்ரீதி பண்ண இப்படிச் சாதம் வைக்கறது வழக்கமாச்சே! ... இந்தப் பரமசிவம் ரொம்ப நன்னா சிராத்தம் — —சே — சிரத்தையா செய்வார்!

ஆரா: வெரிகுட்! எனக்கும் தெரியும்... உங்களுக்கும் இந்தப் பத்தாவெல்லாம் தெரிஞ்சிருக்கே!... இந்தப் பரமசிவம் எங்கே வேலை செய்யறார்?

வாசு: ...நந்தனம் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சுக்கு...

ஆரா: (இடைவெட்டி) அட!... வேலை வாய்ப்பகமா!... அவரைப் பார்க்கணுமே!... ஒரு ஹெல்ப் ப்ளீஸ்.

வாசு: (மனத்துக்குள்) வீக்னஸ் இங்கேயா!... (இரைந்து) என்ன ஹெல்ப் ஸார்?

ஆரா: என் ஒய்ஃபோட தங்கை — அம்ருத வர்ஷிணி — ரிஜிஸ்தர் பண்ணி ரொம்ப நாளாச்சு. ஒரு இண்டர்வ்யூவும் வரல்லே.

வாசு: குழந்தை என்ன படிச்சிருக்கு ஸார்?

ஆரா: ... எந்தக் குழந்தை?

வாசு: ஸார்... ரொம்ப ஜோக் அடிக்கிறீங்க! அம்ருதவர்ஷிணிதான்...?

ஆரா: அவளா!... வர்ற எல்லா நாவலையும் படிக்கிறாள். பி. யூ. சி. கருக்கெழுத்து, டைப்பிங் — லோயர்தான். ஹையர் போகணும்னு சொல்லிண்டிருக்கா! ரொம்ப நாளா!

வாசு: ஜமாய்ச்சுடலாம் ஸார்... இண்டர்வ்யூ வர்றதுக்கு வழிபண்ணி விடலாம்... வாங்க... சாப்பிடலாம்... (உள்ளே திரும்பி) அம்மா, எல்லாம் ரெடியா? .

(பேசிக் கொண்டே சாப்பிடுகின்றனர். வாசுவின் அம்மா, மகனின் கஷ்டத்தைச் சொல்கிறாள். பம்பாய் போவதால் ஏற்படும் சிக்கல்களைச் சொல்கிறாள். பிறகு மானேஜரும் , வாசுவும் ஹாலுக்கு வருகின்றனர்.)

ஆரா: அடேடே! இவ்வளவு சிக்கல் இருக்கா? ஏம்ப்பா வாசு, ஒரு கல்யாணம் பண்ணிட்டா... பிரச்னை தீர்ந்திடுமே?

வாசு: (மனத்துக்குள்) ஒரு கல்யாணம் பண்ணிக்கணும். (இரைந்து) அதுலேயும் ஒரு சிக்கல் இருக்கு ஸார்.

ஆரா: எதுலே? தாலிக் கயிற்றிலா?...

வாசு: ...ப்பா... எக்கச்சக்கமா... அஹ்... இல்லே. ஜோக் அடிக்கிறீங்க!...

படங்கள், டி.வி. எல்லாவற்றிலும் நடித்துப் பிரபலமாயிருக்கும் பென்ஜி என்ற நாய் ஐப்பானிலுள்ள ஒட்டாவா நகரில் இருக்கிறது. இந்த நாய் விமானத்தில் பிரயாணம் செய்தால் முதல் வகுப்பில்தான் போகிறது. முதல்தர ஹோட்டல்களில் தங்குகிறது. அதன் எஜமானருக்கு அது இதுவரை 56 கோடி ரூபாய் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறது. அது பொது மேடைகளில் தோன்றினால் அதற்கு 40000 ரூபாய் கட்டணம்.

சன் — சரோஜா ராமச்சந்திரன்.

விஷயம் என்னன்னு, எனக்குப் பார்த்திருக்கிற பொண்ணு, கல்யாணம் ஆயிட்டால், வேலையை ராஜினமா செய்ய வேண்டும்!

ஆரா: நியாயம்தானே!

வாக: நார்மலா, நியாயம்தான். அவா கேஸ் என்னுடையது. அவள் இன்னும் ஒரு வருஷமாவது வேலைக்குப் போகணும், வீட்டுநிலைமை அப்படி! — அவள் வீட்டு நிலைமை...

ஆரா: சரி... சரி... உன் விஷயம் உன்னோட! என் மச்சினிக்கு, அந்த வேலை வாய்ப் பகத்திலேருந்து நல்ல சேதி வரணும்ப்பா..

வாக: ஓ! எஸ்... பொண்ணுக்கு நல்ல சேதி வரும் ஸார்... ஸார்... என் மாற்றல் உத்தரவு...

ஆரா: (யோசனையுடன்) ...ம்... அந்த ஆர்டர்... டைரக்டர் டேபிளுக்குப் போகல்லே... பார்ப்போம்... அந்த வளவள வரதனை அனுப்ப முயற்சி செய்வோம்!... அந்தப் பக்கத்துப் போர்ஷன்... பரமசிவத்தை இப்போ பார்க்கலாமா!

வாக: (அவசரத்துடன்) வேண்டாம்... நீங்கள் சிவனேன்னு போங்கள். நான் பார்த்து ஏற்பாடு பண்றேன். (மானேஜர் போகிறார்.) (தானுகவே பேசுகிறான்.)

''பக்கத்துப் போர்ஷன் பரமசிவம், நந்தனம் எம்ப்ளாய்மென்ட் எக்சேஞ்ச் பக்கத்து சந்தில் ஒரு கம்பெனியில் இருக்கிறான் என்று முழுசாச் சொல்ல வர்றதுக்குள்ளே இந்த மானேஜர் ... இப்படி ... சரி! பார்ப்போம்!''

3

(வடபழனி கோயில். வாகனி காத்திருக்கிறாள். சன்னதிக்கு அருகே. வாக நுழைகிறான்.)

வாக: ஸாரி வாகனி. ஐ'ம் லேட்... பஸ் ஸ்"லே வர்றச்சே சில்லறைத் தகராறு... அர்ச்சனைத் தட்டு கொடுத்திட்டயா?

வாகனி: ம்... கொடுத்தாச்சு. பாலாபிஷேகம் முடிஞ்சு அலங்காரம் பண்ணின பிறகுதான் அர்ச்சனை.

வாக: சரி... இப்படித் தள்ளிவா. பேசுவோம். முருகன்தான் வழிகாட்டணும்.

வாகனி: பம்பாய் போறதுக்கா!

வாக: உனக்குக் கிண்டலாப் போச்சு! இன்னைக்குக் காலையிலே மானேஜர் சாப்பிட, பதினொரு மணிக்கு வந்துட்டார். (நடந்ததை யெல்லாம் விவரிக்கிறான்.)

வாகனி: ''இப்ப என்ன செய்யறது?... அந்தச் சாணிக்கலர் பேப்பரிலே அமிர்தவர்ஷிணிக்கு இண்டர்வ்யூ வரணுமே?...

வாக: ...வா... தீபாராதனை நடக்குது. முருகன் வழிகாட்டுவான்.

வாகனி: என்ன வாக?... கற்பூர ஹாரத்தி காட்டும்பொழுது படபடன்னு கன்னத்திலே போட்டுக்கங்க... இதெல்லாம் சொல்லித் தரணுமா?

(வாக அப்படியே செய்கிறான். அவன் அருகில் ஒரு சில்க் ஜிப்பா. அவரும் அப்படியே செய்கிறார். முதலில் முகம் சுளித்தாலும், கற்பூர ஹாரத்தி செய்யும் போதெல்லாம், கன்னத்தில் 'பட்பட்' என்று போட்டுக் கொள்கிறார். முகம் மலர்கிறது.)

வாகனி: ...இதோ குருக்கள் வந்துட்டார்... தட்டை வாங்கிண்டு, காசு போடுங்க... ம்... வாங்க. வெளிப்பிராகாரம் மூணு சுற்று சுற்ற வேண்டும்.

(வாகவும், வாகனியும் சுற்றும் போது, சில்க் ஜிப்பாவும் பின் தொடர்கிறார்.)

வாகனி: (மெதுவாக) என்ன இது, மனுஷன் நம்மை... ஃபாலோ பண்றாரே!

வாக: நல்லாயிருக்கே. பிராகாரம் சுற்றினால், இப்படித்தான், பயப்படாமல் வாயேன்.

சி. ஜிப்பா: ஸார்... மேடம்... கொஞ்சம் நில்லுங்க..

வாகனி: என்ன ஆச்சு?... என்ன வேணும்?..

சி. ஜி: என் பேர் சங்கரன். சங்குன்னு கூப்பிடுவார்கள். உங்களுக்கு நன்றி சொல்லணும்.

மன்னிப்பது நல்லது,
அதைவிட நல்லது
மறந்து விடுவது.—
—பிரௌனிங்
—இரா. மோகன்

வாசு: பிராகாரத்துலே முன்னாடி நடந்து வழி காட்டினதுக்கா?

சி. ஜி: சே! சே!... அதுக்கில்லே... அந்தப் பொண்ணு... பேர் என்னமோ...

வாசு: வாசுகி...

சி. ஜி: ...நல்ல பேரு!... கற்பூர ஆராதனை போது, கன்னத்திலே போட்டுக்கோன்னு சொன்னியே.

வாசுகி: ஆமாம், இவர் கிட்டே சொன்னேன். உங்க கன்னத்துலே போட்டாரா?

சி. ஜி: (சிரிக்கிறார்) அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. நானும் அப்படியே பட்பட்னு கன்னத்திலே போட்டுண்டதாலே, மருந்து, மாத்திரைக்கெல்லாம் குறையாத பல்வலி, சட்னு குறைஞ்சு போச்சம்மா.

வாசுகி: இதையெல்லாம் யோசித்துத்தான் இப்படிப் பட்ட பழக்கம் எல்லாம் அந்தக் காலத்துலேயிருந்து இருக்கு!

சி. ஜி: ...பல்வலி குறைஞ்சால், பலவலி குறைஞ்சாப் போல இருக்கு!... நாளைக்குப் நந்தனம் வேலை வாய்ப்பகத்திலே நிறைய பேரோட பேச வேண்டியிருக்கு... நல்ல வேளை...

வாசு: ஆ!... ஸார்!... நந்தனம் வேலை வாய்ப்பகத்திலே... (துள்ளி) ஒரு உதவி ஸார்!

சி. ஜி: ...கேளுங்க. நான்தான் சீஃப் ஆபீஸர்... ஐ வில் ட்ரை மை பெஸ்ட்...

வாசு: என் ஆபீஸ் மானேஜர் மச்சினி — அம்ருதவர்ஷிணி — ரிஜிஸ்தர் பண்ணி ரொம்ப நாளாச்சு ஸார்...

சி. ஜி: அடேடே! அந்தப் பொண்ணுக்கு இண்டர்வ்யூக்கு லெட்டர் ரெண்டு மூணு நாளிலே போகப்போவுதே!

வாசுகி: அது எப்படி ஸார் கரெக்டா சொல்றீங்க? கோயில்லே சொல்றதினாலே பொய்யா இருக்காதே!

சி. ஜி: தம்பீ... இது ஒரு அசாதாரணப் பெயராச்சே! அம்ருதவர்ஷிணீ!... தலைமைச் செயலகத்திலே இண்டர்வ்யூ! லிஸ்டிலே முதல்லே இந்தப் பெயர்தான். சேர் ஆஃப் ஆராவமுதன் தானே!

வாசு: ... ஸார்... ஞாபக இலகம் ஸார் நீங்க...

சி. ஜி: எப்படியோ!... கோயிலுக்கு வந்தால் பல்வலி குறைய முருகன் வழிகாட்டுவான்னு தோணித்து. சரியாப்போச்சு.

வாசு: ... ஸார்... எனக்கும் அதே மாதிரிதான் ஸார்!...

(சி. ஜிப்பா நகர்கிறார்.)

வாசுகி: ...இந்த மனுஷன் பேரு 'சங்கு'. — ஊதற சங்கை ஊதியாச்சு!...

வாசு: பொண்ணுக்குச் சேதி வந்தாச்சு...

வாசுகி: ...நாம அவருக்கு தாங்க்ஸ் சொல்ல வேண்டாமா?...

(சற்று வேகமாக நடந்து அவரைப் பிடிக்கிறார்கள்.)

வாசுகி: ஸாருக்கு எங்கே வீடு?... ரொம்ப உதவி பண்ணிட்டீங்க... வீடு... எங்கே?...

சி. ஜி.: நந்தனம்.

வாசுகி: வந்தனம் ஸார்!

# கிரிக்கெட் கற்கலாம்! 21

கோச்: கே. சந்திரசேகர்

படம்: ராஜு    தயாரிப்பு: குண்டுமணி

பந்து வீச்சாளர் எவ்வகைப்பந்து வீச எண்ணுகிறாரோ, அதற்கேற்பப் பந்து 'கிரிப்'பும் வேறுபடும்.

முதலில் பந்தை விரல் களினால் பிடிக்கும் முறையைக் கற்றுப் பயில வேண்டும். உள்ளங்கையில் ஏந்தக் கூடாது.




ஓட்டம்: (Runup)
ஓட்டத்தின் உட்கருத்து, ஒரு பந்து வீச்சாளர் கோட்டைக் கடக்காமல், நிதானமிழக்காமல் வீசுவது தான்!



இந்த ஓட்டத்தின் தூரம் பல வகைப் பௌலிங்குக்கு ஏற்ப வித்தியாசப்படும்.

அதிக தூரம் ஓட்டம் தேவைப் பட்டாலொழிய அம்முறையைக் கையாள்வது கூடாது. உடல் சக்தி இழக்கும். கட்டோடு அமையாத ஓட்டம் பந்திலுக்கேற்படும் விறு விறுப்பைக் கெடுத்து விடும்.

எப்பொழுதும் உடல் கனம் முன் னோக்கியே இருத்தல் அவசியம்.



பக்கவாட்டில் சாய்ந்து நெளிந்தோடுதல் கூடாது.

ஓட்டத்தில் கால்கள் நீள நேர்கோடு தேவை. ஓடும் போது கைமீதெழும்பும் எழும்பிச் செல்லும் வகையில் வீசப் பட வேண்டும்.



ஓட்டத்தின் போது தலை நிமிர்ந்து நின்று அசையாதிருத்தல் தேவை.

# பாங்கு ஊழியர் போராட்டமும் மக்கள் படும் அவதியும்




12-1-79 அன்று உரையாடலில் ஈடுபட்டோர்:

திரு என். சம்பத்,
பொதுச் செயலாளர், தமிழ்நாடு வங்கி ஊழியர் சம்மேளனம்.

திரு ஆர். எல். காந்தன்,
மானேஜர், ராம்நாத் அண்ட் கம்பெனி,
சென்னை-1 (வங்கி வாடிக்கையாளர்)

காந்தன்: அதிகம் ஊதியம் பெறும் ஊழியர்களில் வங்கி ஊழியர்கள் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவர்கள் என்பது எல்லோரும் அறிந்த உண்மை. அப்படியிருக்க மேன்மேலும் ஊதிய உயர்வைக் கேட்டு நீங்கள் போராட்டம் நடத்துவது எப்படி நியாயமானது?

சம்பத்: ஊழியனின் தேவைகளை அடிப்படையாகக் கொண்டு தரப்பட வேண்டியது ஊதியம். நம் நாட்டில் எந்த ஊழியனுக்கும் சரியான ஊதியம் தரப்படுவதில்லை என்பது என் கருத்து. அப்படியிருக்க வங்கித் தொழிலாளர்கள் அதிகம் ஊதியம் பெறுகின்றனர் என்பது தவறானது. தனித் துறையில் (Private Sector) வேலை செய்யும் எத்தனையோ ஊழியர்கள் வங்கி ஊழியர்களைவிட அதிகமாக ஊதியம் வாங்குகிறார்களே!

காந்தன்: தனியார் துறையைப் பொதுத் துறையோடு ஒப்பிடுவது சரியானது அல்ல. பொதுத்துறையில் வேலை செய்பவர்களுக்கு தேசிய மனப்பான்மை இருக்க வேண்டும்.

சம்பத்: ஏன் எத்தனையோ பொதுத்துறை ஊழியர்கள் கூட வங்கி ஊழியர்களைவிட அதிகம் ஊதியம் பெறுகின்றார்களே! ஏனோ வங்கி ஊழியர்கள் மட்டுமே பலருடைய கண்களை உறுத்துகின்றனர்!

காந்தன்: எத்துறையினராக இருந்தாலும் சரி, தங்களிடையே தொழிலாளர் ஒற்றுமை இருக்கிறது என்பதனால் போராட்டம் நடத்தி, நடத்தி, ஒரு வரம்புக்குமேல் ஊதிய உயர்வைப் பெறுவதனால் நாட்டின் பொருளாதார நிலைமைக்கு பலவீனம் உண்டாகாதா?

சம்பத்: தற்போது வங்கி ஊழியர்கள் நடத்தும் போராட்டம் ஊதிய உயர்வை அடிப்படையாகக் கொண்டது அல்ல என்று முதலில் தெரிவித்துக் கொள்கிறேன். எங்களது போராட்டத்துக்கான காரணத்தை விளக்குமுன், ஊழியர்கள் தங்கள் தேவை அடிப்படையில் ஊதியம் பெறுவதால் நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படும் என்று தாங்கள் சொன்னதற்கு விளக்கம் கொடுக்க விரும்புகிறேன். வங்கித் துறையை எடுத்துக் கொள்வோம். வங்கிகள் செலவழிக்கும் தொகையில் ஊழியர்களுக்கு அளிக்கப்படும் ஊதியம் சுமார் 25 சதவீதமாகத்தான் இருக்கிறது,

அதோடு இச்சதவீதம் ஆண்டுக்கு ஆண்டு குறைகிறதே தவிரக் கூடவில்லை. தேசிய மயமாக்கப்பட்ட பின்னும் வங்கி நிர்வாகம் கடைப்பிடிக்கும் Credit Policy தான் நாட்டுப் பொருளாதாரத்திற்கு பங்கம் விளைவிப்பதாக இருக்கிறது. தற்போது வங்கிகளினால் பயன் பெறுவது சமுதாயத்தின் உச்சாணிக் கிளையில் இருக்கும் தொழிலதிபர்களே தவிர, சாதாரண மனிதன் அல்ல. 40 சதவீதம் இருக்கும் விவசாயிகளுக்கு வங்கிகள் அளிக்கும் கடன் உதவி மிக மிகக் குறைவானது. இதையெல்லாம் எதிர்த்து மக்கள்போராட மாட்டேன் என்கிறார்கள். வங்கி ஊழியர்கள் ஊதியம் பெறுவதால் நாட்டுப் பொருளாதாரம் பாதிக்கப்படுகிறது என்று கூறுவது வேதனையாக உள்ளது!

காந்தன்: வங்கிகளின் இத்தகைய Credit Policy யை எதிர்த்து நீங்களே ஏன் போராடக் கூடாது!

சம்பத்: அத்தகைய நடவடிக்கைகள் நாங்கள் எடுத்ததால்தான் பல தொழிலதிபர்களும் எங்கள்மேல் குரோதம் கொண்டு எங்களது இத்தகைய போராட்டத்திற்கு எதிரான துஷ்பிரசாரம் செய்து வருகிறார்கள். 'வங்கி ஊழியர்களே உங்களுக்குப் பணம் வேண்டுமென்றால் உங்கள் மனைவிகளை எங்களிடம் அனுப்புங்கள்' என்று பொது மக்கள் கூறுவதுபோல் ஓர் ஊரில் நோட்டீஸ் அடித்து ஒட்டப்பட்டுள்ளது. பொது மக்கள் இம்மாதிரி நோட்டீஸ் அடிப்பார்கள் என்று எவர்தான் நம்புவர்?

காந்தன்: நீங்கள் பேச்சை திசை திருப்புகிறீர்கள். கணிசமான ஊதியத்தைப் பெற்று ஓரளவு வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருக்கும் நீங்கள் நம் நாட்டின் பெரும்பான்மையான மற்ற தொழிலாளர்களைவிட மேம்பட்டுத்தான் இருக்கிறீர்கள். அப்படியிருக்க இம்மாதிரி அடிக்கடி போராட்டம் நடத்திப் பொது மக்களுக்குத் தொல்லைகள் தருவது எப்படி சரியானதாகும்?

சம்பத்: எங்கள் போராட்டத்தால் பொது மக்களுக்கு அசௌகர்யங்கள் உண்டாவது குறித்து நாங்களும் மிக மிக வருத்தப்படுகிறோம். ஆனால் எங்களது போராட்டம் தவிர்க்க முடியாததாக ஆகிவிட்டது. தொழிலாளர்களுக்கான சில அடிப்படை உரிமைகளைப் பெறவும் தற்போது நாங்கள் பெறும் ஊதியம் குறைக்கப்படவிருக்கும் அபாயத்தைத் தடுத்து நிறுத்தவுமே இப்போராட்டத்தைக் கைக்கொண்டுள்ளோம்... பல விதத் துறை ஊழியர்களுடன் ஒப்பிடும்போது வங்கி ஊழியர்களின் அடிப்படை சம்பளம் (Basic Pay) குறைவானது. ஒரு நாலாந்தர சிப்பந்தியின் ஆரம்ப அடிப்படைச் சம்பளம் ரூ 116 -ம் மூன்றாந்தர சிப்பந்தியின் ஆரம்ப அடிப்படைச் சம்பளம் ரூ 170ம் ஆகும்...

காந்தன்: அதை ஈடுகட்டத்தான் ரெட்டை மடங்குக்கும் மேலாகப் பஞ்சப்படி வாங்குகிறீர்களே!

சம்பத்: பஞ்சப்படி என்பது பொருள்களின் விலைவாசியின் அடிப்படையில் அளிக்கப்படுவது... விலைவாசிகள் குறைந்து போனால் அதுவும் குறையத்தானே போகிறது... பெரும்பான்மை துறை ஊழியர்களின் பிராவிடண்ட் பண்ட் அவர்கள் பெறும் மொத்த சம்பளத்தின் அடிப்படையில் பிடிக்கப் படும்போது வங்கி ஊழியர்களுக்கு மட்டும் அடிப்படைச் சம்பளத்தின் பேரில் பிராவிடண்ட் பண்ட் பிடிக்கப்படுகிறது. எங்களுக்குப் பென்ஷனும் கிடையாது. ஓய்வுக்கால நிதியும் (Gratuity)' அடிப்படைச் சம்பளத்தின் பேரில் தான் கணக்கிடப்படுகிறது. ஆகையினால் நாங்கள் பெறும் பஞ்சப்படியின் ஒரு பகுதியை அடிப்படைச் சம்பளத்துடன் இணைக்கவும், வருடத்திற்கு ஒரு ஊழியரின் குடும்பத்துக்கு மொத்தமாக அளிக்கப்படும் ரூ 150 - மருத்துவ உதவிப் பணத்தை அதிகமாக்கவுமே முக்கியமாகப் போராடுகிறோம் ... 1974ம் ஆண்டே சமர்ப்பிக்கப்பட்ட எங்களது கோரிக்கையின் அடிப்படையில் தற்போதுதான் பேச முன்வந்துள்ள வங்கிகள் நிர்வாகத்தினர் மறைமுகமாக நாங்கள் பெறும் மொத்தச் சம்பளத் தொகையைக் குறைக்கும் விதமாக நடவடிக்கைகள் எடுப்பதால்தான் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

காந்தன்: வாடிக்கையாளர்களின் பணத்தால் தான் வங்கிகள் நடக்கின்றன. வங்கிகள் செவ்வனே நடந்தால்தான் இத்தகைய உரிமைகளைக் கேட்டு, நீங்கள் குரலெழுப்ப முடியும். அப்படியிருக்க வங்கி நிர்வாகத்தினருக்கு எதிரான உங்களது போராட்டத்தில் வாடிக்கையாளர்களை பழிவாங்குகிறீர்களே!

சம்பத்: எங்களது நோக்கம் வாடிக்கையாளர்களைத் துன்புறுத்துவது அல்ல. டிசம்பர் 15ம்தேதி வரை — அதாவது நாங்கள் போராட்டம் நடத்த ஆரம்பிக்கும்வரை — நாங்கள் வாடிக்கையாளர்களுக்கு செய்த ஒத்துழைப்பையும், சேவையையும் நீங்கள் மறந்துவிடக் கூடாது. பல விதிமுறைகளையும், மீறி எத்தனையோ வாடிக்கைக்காரர்களுக்கு அவசரச் சமயத்தில் நாங்கள் உதவி புரிந்திருக்கிறோம்... கிராமாந்திரப்

---

மேலான மனிதன் தேடுவது அவனுள்

தேடுவது மற்றவர்களிடம் இருக்கிறது. — கன்பூஷியஸ்

— இரா.மோகன்

பகுதிகளில் உள்ள பல்லாயிரக் கணக்கான வங்கி கிளைகளில் வேலை புரியும் எங்களது ஊழியர்கள் வேலை நேரம் பார்க்காமல் தங்களாலான உதவிகளைக் கிராமப்புற மக்களுக்குச் செய்வதையும் எவரும் மறந்துவிடக்கூடாது... எங்களது உரிமைகளைக் கோரி வேறு வழியில்லாத நிலையில் நாங்கள் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்... இச்சமயத்தில் எங்களால் வாடிக்கையாளர்களுக்கும், பொதுமக்களுக்கும் உண்டாகும் சிரமத்திற்காக நாங்கள் மன்னிப்புக் கோருகிறோம்... போராட்டம் எந்தக் கட்டத்தில் தீர்வு பெற்று முடிந்தாலும் அடுத்த கணத்திலிருந்து எங்களது மனமார்ந்த ஒத்துழைப்பு வாடிக்கையாளர்களுக்கு உண்டு...

காந்தன்: 'விதிப்படி வேலை' (work to rule) என்று சொல்லி போராடும் போது நீங்கள் வேண்டுமென்றே நிதானமாகச் செயல்படுகிறீர்களே (Go slow) இது சரியா?

சம்பத்: இந்த வாதத்தை நான் மறுக்கிறேன். எங்களது வங்கி விதிகள் படி சில வேலைகளைக் குறிப்பிட்ட விதமாகத்தான் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் எங்களுக்குச் சட்டப்படி பாதுகாப்பு உண்டு. சுமுகமான காலங்களில் வாடிக்கையாளர்களுக்கும், பொதுமக்களுக்கும் உதவுவதற்காக, சில விதிமுறைகளை எங்களது சொந்தப் பொறுப்பில் தளர்த்தி நாங்கள் வேலை செய்வதால் விரைவில் செயல்படுகிறோம்... காசோலையில் (Cheque) காணப்படும் வாடிக்கையாளர் கையெழுத்தை (Specimen Signature)ன் ஒப்பிடுவது போன்ற விதிமுறைகள் இதில் அடங்கும்... போராட்டக் காலத்தில் இவ்விதி முறைகளை நாங்கள் சிறிதும் வழுவாமல் அனுசரித்துச் செயல்படுவதால் வேண்டுமென்றே நிதானமாகச் செயல்படுவதாக உங்களுக்குத் தோன்றலாம்... எங்களது வேலை கம்பி மேல் நடப்பது போன்றது. சிறிய தவறு நேர்ந்தாலும் அதனால் வரும் மிகப்பெரிய பலாபலன்களை நாங்கள்தான் அனுபவித்தாக வேண்டும்.

காந்தன்: 'தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக!..' என்று குரல் எழுப்புகிறீர்களே... உங்களை எப்படித் தொழிலாளர் வர்க்கமாக இணைத்துக் கொள்கிறீர்கள்...? வாழ்க்கை வசதியின் அடிப்படையில் உங்களை மத்திய தர வர்க்கம் என்றுதான் கூறமுடியுமே தவிர தொழிலாளர் வர்க்கமாக எப்படிக் கருத முடியும்?

சம்பத்: Any exploited class is working class - ஆகையால் நாங்களும் தொழிலாளர் வர்க்கம்தான்...

காந்தன்: 'அனைத்துலக தொழிலாளர்களே ஒன்றுபடுங்கள்' என்று குரல் எழுப்புகிறீர்களே... மற்றைய தொழிலாளர்களின் போராட்டத்திற்கு நீங்கள் என்ன செய்து விட்டீர்கள்!

சம்பத்: இதற்கான விளக்கத்தை விவரமாகச் சொன்னால் பெருமையடித்துக் கொள்வது போல் ஆகிவிடும்... விவசாயிகள் போராட்டம், சிம்சன், T.V.S., ஸ்டாண்டர் மோட்டார்ஸ் தொழிலாளர் போராட்டம் ஆகிய வற்றிற்கெல்லாம் எங்களாலான உதவியைச் செய்திருக்கிறோம்... அவர்களுக்கு அது தெரியும்!

காந்தன்: உண்மையிலேயே சமுதாயத்திற்கு உதவ வேண்டும் என்ற எண்ணம் இருந்தால், 'ஓவர் டைம்' வசதியைத் தவிர்த்து அதற்குப் பதிலாக வேலையற்று இருக்கும் எண்ணற்ற இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புத் தர வங்கி நிர்வாகத்தினருடன் நீங்கள் ஏன் போராடக்கூடாது?

சம்பத்: 'ஓவர் டைம்' கூடாது என்பது தான் எங்களது வாதமும்... தற்போது தவிர்க்க முடியாத சில வேலைகளுக்காக மட்டுமே 'ஓவர்டைம்' பெறுகிறோம். 1960ல் வங்கி நிர்வாகம் ஒவ்வொரு ஊழியரும் வருடத்திற்கு 600 மணி நேரம் ஓவர்டைம் செய்ய வேண்டும் என்று கூறியது. நாங்கள் அதை 160 மணி நேரமாகக் குறைத்தோம். தற்போது நடைமுறையில் அது 90 மணி நேரமாகக் குறைந்து உள்ளது. இதுகூட வேண்டாம் என்பதுதான் எங்கள் விருப்பமும்...

காந்தன்: நீங்கள் எவ்வளவுதான் விளக்கம் கொடுத்தாலும் பொது மக்கள் வங்கித் தொழிலாளர் மீது கொண்டுள்ள அதிருப்தியை மாற்ற முடியாது...

சம்பத்: தங்களுக்கு அசௌகர்யம் ஏற்படும் போது மக்களுக்கு அதிருப்தி ஏற்படுவது சகஜம்தான்...: ஆனால் விரோத மனப்பான்மையைத் தூண்டும் சில சக்திகளின் துஷ்பிரசாரம்தான் மக்களிடையே எங்கள்பால் குரோதத்தை அதிகமாக்கக் காரணமாகின்றது. எங்களால் பொது மக்களுக்கு ஏற்படும் அசௌகர்யங்களுக்காக மறுபடியும் மன்னிப்புக் கோருகிறேன். இப்போராட்டம் முடிந்ததும் அவர்களுக்கு நாங்கள் கொடுக்கப் போகும் மனமார்ந்த ஒத்துழைப்பு எங்கள்மேல் அவர்கள் தற்போது கொண்டுள்ள அதிருப்தியை நீக்கிவிடும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

உரையாடல் ஏற்பாடு: **நாயகன்**

போட்டோ: **மன்னை மூர்த்தி**

---



மார்க்ட்வெயின் ஒருமுறை தம் மனைவிக்கு வந்திருந்த கடிதத்தைப் பிரித்து விட்டு அதன்மேல் இப்படி ஒரு குறிப்பு எழுதினார் தமக்கே உரிய பாணியில்:

"தவறுதலாகப் பிரிக்கப் பட்டது — உள்ளே என்ன எழுதியிருக்கிறது என்பதை அறிய!"

— சம்பத்குமாரி




## 21. துரோகச் செய்தி

அமைதியாக ஒரு நிம்மதி தேடி நிதானத்துடன் சுழலும் என்று படைத்த பூமியில், யுத்தம் யுத்தம் என்கிற முரட்டு ஆர்ப்பாட்டமுடன் இந்த மனிதர்கள் தங்கள் தினவெடுத்த – திமிரெடுத்த தோள்களைத் தட்டுவதில்தான் மிகச்சிறந்த நாகரீகமானது தனதுபொற்சிறகை விரித்து வானில் பறப்பதாக எண்ணுகிற மடத்தனம் உருவாகிவிட்டதே என்கிற வேதனையுடன் ஞாயிறு உதயமாகிறான்...

உத்திராயணம் என்றும் தட்சிணாயனம் என்றும் இடம்பெயர்ந்து உதயமாகி இந்தப் பூமியை மட்டும் ஒரு குறிக்கோளாகக் கொண்டு கவனிப்பவனைப் போல இயற்கையின் விசித்திர விநோதங்கள் பலவற்றைக் கொட்டிப் படைத்துக் கெக்கலி கொட்டி ஒளிச்சிரிப்புச் சிரித்துப் பார்க்கிறான்...

தனது அறிவு ஜோதியால் பல அறிவு ஜீவிகளைச் சிருஷ்டித்தோமே... அவர்கள் என்ன செய்கிறார்கள்?

'ம்ஹூம்! இந்த மனிதர்கள் சத்தியமாகத் திருந்தவே மாட்டார்கள்' என்கிற முடிவுடன் சினந்து, இப்போது மிக மிக அருகே வரத்தொடங்கி, வெய்யிலை வாரிவாரி கட்டுப் போகக்கக் கங்கணம் கட்டிக் கொண்டானோ?

என்றோ ஒருநாள்...

சூரியன் தனது எல்லைக் கோட்டைத் தாண்டி வந்து, இந்த உலகைப் பார்க்கிற போது, அவனது கோபாக்னி தாளாது, இந்த உலகம் உருவிழந்து அழுகிவிடப் போகிறது...

ஆகவே, மானுடர்காள்! யுத்தத்தை நிறுத்துங்கள்! யுத்தத்தை நிறுத்துங்கள்! அமைதி தேவை! அமைதி தேவை!...

போர்முகத்தை நேரில் கண்ட ரங்கநாயகி, இவ்விதமாக ஓர் அற்புதச் சிந்தனையில் கற்பிதம் செய்து கொண்டு, தனக்குத் தெரிந்த கவிரசக் கன்னட பாஷையின் ஆழத்தில் நீந்தி, இலக்கணப் பிழைகளுக்கு மீறிய ஒரு புதிய பாணியில் கவிதையாக இயற்றி வைத்திருந்த அந்தக் காகிதத் துண்டை எடுத்து மீண்டும் மீண்டும் பக்கத்திலிருந்த ஒரு கன்னடவீரன் மூலமாகப் படிக்கச் சொல்லிப்

பார்க்கிறார் நவாப் ஹைதர் அலி. அவருக்கு அந்தக் கவிதையின் அர்த்தம் புரிந்த அளவுக்கு ஆழம் புரியவில்லை.

ஓ... இவள் மனிதர்களைக் கோழையாக்குகிறாள்...

யுத்தமாகிய சிறந்த நாகரீகத்தை இந்த நாரீமணி சாடுகிறாள்...

ஆ! இவளுக்கு அளித்த தண்டனை சரியானதே! இவளை மேலும் விட்டு வைத்திருந்தால்...

இந்த இந்திய மண்டலத்தின் சரித்திர நாயகனாகப் போகிறவனை — திப்புசுல்தானை — தனது அருமைக் குமாரனை அசல் கோழையாக்க முயன்றிருப்பாள்...

ராஜகோஷமிடும் சிங்கத்தை முயலாக ஆக்கியிருப்பாள்...

அவரது மனம் குமைந்து முனகுகிறது...

கையிலிருந்த அந்தக் கவிதைக் காகிதத் துண்டைக் கசக்கிக் காலடியில் போட்டு மிதித்துத் தேய்த்துத் தெற்றி எறிந்துவிட்டு வெளியே வருகிறார்.

ரங்கநாயகி அதுவரை வசித்து வந்த அந்தக் கூடாரத்தையே எரித்து விட்டால் என்ன என்றும் ஆத்திரமடைகிறார்! அவரது எரிச்சல் கண்களில் ஜுவாலையாக வெளிவருகிறது...

கிழக்கு முகத்தை நோக்குகிறார்...

சூரியன் பிரகாசக் கவிதையை வானப் பலகையில் எழுதியவாறு பயணமாகிக் கொண்டிருக்கிறான்.

சுற்றிலும், ரங்கநாயகியின் காவலுக்காக அமர்த்தப்பட்ட வீரர்களை நோட்டம் விடுகிறார்.

“நீங்கள் இனி இங்கு காவல் புரிய வேண்டிய அவசியத்தை, இதுவரை நீங்கள் காவல் காத்த ரங்கநாயகி வைக்கவில்லை. ஆகவே நீங்கள் சென்று ஓய்வு கொள்ளலாம்.”

எரிச்சலோடு கத்துகிறார் ஹைதர் அலி.

ஒன்றும் புரியாத — புரிந்து கொள்ள முடியாத காவல் வீரர்கள் மௌனமாய்க் கலைந்து செல்கின்றனர்.

தமது கூடாரத்தையடைந்த ஹைதர்அலி, ரங்கநாயகி பற்றியதில் தாம் நடந்துகொண்டது சரியானதே என்று தம்முள் ஒரு நியாயம் கற்பித்துப் பெருமூச்சு விடுகிறார்.

திப்புவுக்கு இவ்விஷயம் தெரிகிற போது கற்பிக்கப் போகிற நியாயங்கள் என்ன?

இன்னமும் அவருக்குப் புரியவில்லை.

கதிரவன் எத்தனையோ இளங் காலைப் போதுகளை மூத்த மீட்டு, முதிய மாலைகளை அணிந்து, இந்த உலகின் நித்தியா நித்தியங்களைப் போதிக்கிறான்!

இன்னமும் ஆர்க்காட்டு யுத்தம் ஓயவில்லையே என்று பெரிதும் கவலை கொண்ட ஹைதர் அலி, அன்றே படைகளுடன் புறப்படலாமா என்று உத்தேசித்து, பிறகு அந்தப் பரிசீலனையைக் கலைத்துக்கொள்கிறார்.

நாம் ஆர்க்காட்டுக்குச் சென்றால், ரங்கநாயகியைக் காண வருவான் திப்புசுல்தான். இது விஷயத்தை அப்போதைக்கு அவிழ்த்து விட்டால், யுத்தபேரிகை முழங்குவதற்குப் பதிலாக அது கிழிபட்டு அவமானத்தை யுண்டுபண்ணுமானால்...

ஓ... ஆர்க்காட்டு நவாப்பு முகமதலிக்குப் போயும் போயும் சரணடைவதா? அந்நியர்பால் சேர்ந்து மண்ணைப் பேடிமையாக்கும் அவனிடம் எனது குமாரன் திப்புசுல்தான் பின்வாங்க நேருவதாவது...

பேரம்பாக்கத்திலேயே காத்திருக்க முடிவு செய்கிறார் ஹைதர் அலி.

ஏறத்தாழ ஐம்பது தினங்களாகியும் இன்னமும் ஆர்க்காட்டு நவாப்பை வெற்றி கொள்ள முடியாது திப்பு போராடுகிறானே என்று மனம் வருத்திக் கொண்டிருக்கையில்...

ஆ! திப்புசுல்தான் ஆர்க்காட்டை வீழ்த்தி விட்டான் என்கிற இனிப்புக்கு இனிப்புதருகிற செய்தி கிடைத்தது. அவரது மகிழ்ச்சி அளவு கலையெல்லாம் கடந்து விரிகிறது...

‘எனது மகன் இந்தப் பூமியின் வீர நாயகன்’ என்று தம்முள் முனகிப் பூரித்துப் பெருமிதம் கண்ட அடுத்த விநாடி...

படைகளைக் கிளப்பிக் கொண்டு ஆர்க்காட்டை நோக்கிப் பயணப்பட்டார்.

வெற்றிச் செய்தி கொண்டு வந்த வீரர்கள் மூலம் ஆர்க்காட்டு யுத்தத்தின் முழுச்செய்தியையும் வழிநெடுகத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டினார் ஹைதர்அலி.

ஆர்க்காட்டு நவாப் — வெள்ளையர்களின் வழித் துணைவன் — திப்புவின் பாஷையில் சொல்ல வேண்டுமானால் சுதந்திர வேட்கை யற்ற சுயநலக்கிருமி — வீழ்ந்துபட்டதில் பெரு மகிழ்ச்சியடைகிறார் ஹைதர் அலி. வெள்ளைக் கும்பினியின் சூத்திரதாரியான சர் அயர்கூட் என்பவனே வீழ்ந்து பட்டதுபோல அவரது மனம் குதூகலிக்கிறது.



இந்த ஆர்க்காட்டு யுத்தத்தில் முழுக் கவனம் செலுத்திப் போராடிய கர்னல் காஸ்பி, கேப்டன் கீட்டிங், கேப்டன் ஸ்பின்ட் போன்ற வெள்ளைக் கும்பினிக் கழுகுகளிடமிருந்து தப்பி ஆர்க்காட்டை வீழ்த்தியது மிகப்பெரிய சாதனையாக எண்ணி இறுமாந்தார் ஹைதர்அலி.

நல்ல மாலைப் போதில் ஆர்க்காட்டை அடைந்த ஹைதர்அலியை, அன்புடன் வரவேற்று மகிழ்கிறான் திப்புசுல்தான். நவாப் முகமதலியின் — அபரிமிதமாக ஆண்டு அனுபவித்து அகமகிழ்ந்து கிரீடைகள் நிகழ்த்திய — அரண்மனை மாளிகைக்கு அழைத்துச் செல்கிறான்.

அடடா! அரண்மனையா அது? ஒரு குட்டிச் சொர்க்கத்தையே அதனுள் மிக்கவும் கலைநுணுக்கத்துடன் கூடிய போகாலயமாக நிர்மாணித்துத் துய்த்து வந்திருக்கிறானே இந்த ஆர்க்காட்டு நவாப்! மக்கள் படுகிற துயரம், பாதிக்கப்பட்ட தொழில்கள், பரிதவிக்கும் ஏழைகள், வெள்ளைப் பறங்கியர் மெல்ல மெல்ல அடிமையாக்கி வருகிற இந்தத் தேசம் — இவை யாவும் கண்களில் படக் காரணமே இல்லாத முதலீடு போல விளங்கியிருந்த அந்த அரண்மனையைச் சுற்றிக் கவனிக்கிறார் ஹைதர்அலி.

''திப்பு! வெற்றிப் பூரிப்பின் இந்த நல்ல நாளிலேயே — இன்றே — இப்போதே இந்த ஆர்க்காட்டு நவாப்பின் அரியணையில் உன்னை அமர்த்தி அழகு பார்க்க ஆசைப்படுகிறேன். தந்தை சொல் தட்டாது உடன்பட்டு ஆவனவற்றைக் கவனி!'' என்று அசைக்க முடியாத — அழுத்தமான தொனியில் ஆணையிடுகிறார் ஹைதர் அலி.

எதிர்பாராத இந்தச் சுந்தரக் கனவில் ஒருவிநாடி கழித்து நிலைத்துப்போன திப்புசுல்தான், மகிழ்ச்சிப் பெருக்குடன், தந்தையின் பாதங்களைத் தொட்டுத் தனது மரியாதையை ஒரு ராஜ விசுவாசத்துடன் கூடிய புல்லரிப்புடன் செலுத்தி, மறுகணம் சற்றே தயங்கி, ''உங்கள் வார்த்தைக்கு மீறிய வார்த்தை இந்தத் தட்சிணத்திலேயே இருக்க கூடாது என்று வெற்றிமுழக்கம் செய்கிறவன்

உங்கள் மகன் திப்பு: அவனா மறுக்கப் போகிறான்? ஆனால்...'' என்று வார்த்தைகளை முடிக்க முடியாது திணறிச் சுற்றுமுற்றும் கவனிக்கிறான்.

''என்ன திப்பு? யாரைத் தேடுகிறாய்?''

—இவ்விதம் ஹைதர் அலி கேட்கிற போது, தமது குமாரன் யாரைத் தேடுவான் என்பதைத் தெரிந்து கொண்டே பாவனை செய்கிறார். அந்தப் பாவனையில் பலவிதமான கேள்விக்குறிகள் உள்ளடக்கமாய் கொக்கியாகக் குத்துகின்றன. ஆ! அந்தப் பயங்கர விஷயத்தை — சுமத்தப் போகிற பழியை இந்த அரியணை விழாவுக்குப் பிறகு வைத்துக் கொள்ளலாம் என்ற முடிவின் கீழ்தானே வெற்றிவிழாவை இன்றே — இப்போதே என்று ஆணை பிறப்பித்து இருக்கிறார்...

அந்தச் செய்தியை முன்கூட்டி வெளிப்படுத்தி விட்டால்...

திப்புவின் உள்ளம் சமுத்திரமாகக் கொந்தளிக்குமோ? எரிமலையாய் வெடிக்குமோ? பூமியைப் பிளக்குமோ?

தந்தையின் தயக்கத்தைக் கண்ட திப்புசுல்தான், ''பசவராஜும் ரங்கநாயகியும் வரவில்லையா?'' என்று கேட்கிறபோது, அவனது குரலில் 'உடனடியாக அவர்களைப் பார்க்க வேண்டும் என்பது' தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது...

மிகவும் கூர்மையாகத் தமது குமாரனைப் பரிசீலிக்கிறார் ஹைதர்அலி.

''அவர்கள் பேரம்பாக்கத்திலேயே இருக்கிறார்கள். நான்தான் அவர்களை அவ்வாறு இருக்குமாறு தக்க பாதுகாப்புடன் விட்டு வந்திருக்கிறேன். இது ஆர்க்காடு. நாவப்பின் ஆட்கள் கண்களில் ரங்கநாயகியின் பேரழகு படுவதை நான் விரும்பவில்லை.''

ஹைதர் அலி இவ்வாறு நிரம்பவும் சிந்தித்தே பொய் சொல்கிறார். அவரது குரலோ மேலும் இது குறித்துப் பேசாதே என்பது போல ஒலிக்கிறது.

ஒருநிமிஷம் யோசித்த திப்புசுல்தான், ''இந்த விழாவுக்கு அவர்களிருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன்!'' என்று கூறுகிற போது சொற்களில் ஒருவிதப் பிடிவாதம் கலந்திருந்தது.

இனியும் தனது முரட்டுச் சுபாவத்தைப் பயன்படுத்தா விட்டால், திப்பு மேலும் பேசப் போய், உண்மை வெடிபட்டால், விழா தடைபட்டு, தனது ஆசை — மகனுக்கு நவாப் பட்டம் சூட்டி அழகு பார்க்க நினைத்த ஆசை— பொடிபட்டு விடுமோ என்று புரிந்த ஹைதர் அலி, ''திப்பு! இந்த விழா இக்கணமே நடந்தாக வேண்டும் என்பது உனது தந்தை ஹைதர்அலியின் அவா! இதற்கான ஏற்பாடுகளுக்கு ஆணை பிறப்பித்தாய் விட்டது. இனி எதைப் பற்றியும் யோசிக்க நேரமில்லை. நீயோ, அல்லது நானோ சென்று உத்தரவிட்டாலொழிய ரங்கநாயகி அங்கிருந்து புறப்பட முடியாது. எனது கடுமையான ஆணை அவ்வாறானது. இது, இந்த ஹைதர் அலி ஒருவன் மட்டுமே கண்டு களிக்க ஏற்பாடு செய்கிற விழா! விழா முடிந்ததும் நானோ நீயோ சென்று அவர்களை அழைத்து வரலாம்!'' என்று உரக்கச் சத்தமிட்டு அந்தப் பேச்சுக்கே ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

எங்கே இந்த விழா நடைபெறாமல் போய் விடுமோ என்கிற ஆதங்கம் அவரது நெஞ்சுக் குழியில் உருண்டது. ஒரு புகழ் பெற்ற நவாப் அரண்மனையிலேயே தமது குமாரனுக்கு 'நவாப்' விருது வழங்கவிருந்த நிகழ்ச்சியை விட்டு விடுவாரா ஹைதர் அலி?

தந்தையை எதிர்த்துப் பேச முடியாத திப்புசுல்தான், ஒரு தர்மத்தின் அடிமை போல மௌனமானான்.

அன்றிரவு, ஆர்க்காட்டு நாவாப்பின் போகாலயம் போன்று விளங்கிய சொர்க்காலய அரண்மனையில், தமது குமாரனின் வெற்றிவிழாவை மிக்கவும் கோலாகலமாக ஏற்பாடு செய்து நடத்தி வைக்கிறார் ஹைதர் அலி.

தமது நீண்ட நாளைய ஆசையை அரங்கேற்றுவது போலவும், மைசூரில் இருக்கிற ஒருசிலருக்குப் பாடம் கற்பிப்பது போலவும், தாம் ஸ்ரீரங்கப்பட்டினத்திலிருந்து போர்ப் பயணம் நடத்திய தினத்தன்று செய்த ராஜப் பிரகடனத்தை விடவும் இங்கே இந்த மகோன்னத செயலைச் செய்து முடிக்கிறார்...

அதுதான்...

பலரறிய — பாரறிய ஒரு கீர்த்திவாய்ந்த சிங்கத்தின் ராஜகர்ஜனையே போன்று கனீரென்று முழங்கி, அந்த முழக்கத்தில் தமது குமாரனின் வீரப்பிரதாபங்களைப் புகழ் முரசு கொட்டிப் பின்னர்; 'நவாப்' என்கிற விருதுவைத் தமது ஜயக்கொடியின் கீழ்நின்று பெருமையுடன் வழங்கினார் ஹைதர் அலி கான் நவாப் பகதூர்!

சபை முழுவதும் ஒரே வீரகோஷம்...

'நவாப் திப்புசுல்தான் வாழ்க!'

மண்டபமே அதிரும்படி கிடுகிடுக்கிறது...

பூரித்துப் போகிறார் ஹைதர்அலி.

அந்தப் பூரிப்புடன், ''இன்றைக்கு அளிக்கப்பட்ட நவாப் விருது சாதாரணம். எனக்களிக்கப்பட்ட பகதூர் பட்டத்தை விரைவில் எனது குமாரன் பெறுவானாக!

## டெலிபோன் சாப்பாடு!

டெல்லியிலுள்ள ஹோட்டல்களுக்கு டெலிபோன் செய்தால் சாப்பாடு கொடுத்து அனுப்புகிறார்கள். இதற்குத் தனி சார்ஜ் கிடையாது. ஆனால் வீடு ஹோட்டலிலிருந்து மூன்று கிலோ மீட்டருக்குள் இருக்க வேண்டும்.

ஸ்டேட்ஸ்மென் — பாபு.




அதனினும் மேம்பட்ட - நான் அடைய வேண்டாம் என்று கருதிக் கொண்டாடுகிற அசாதாரணமான பட்டம் பாதுஷா! இதனை விரைவில் ஸ்ரீரங்கப்பட்டினம் கண்டுகளிக்குமாக! இவ்விதம் பெற்று இந்தத் தென்புலமும் வடபுலமும் அவனது ஒருகுடையின்கீழ் இயங்க எல்லாம் வல்ல சர்வ வல்லமை பொருந்திய நமது அல்லாஹ்வின் திருநாமத்தை மனப்பூர்வமாக வணங்கித் தொழுவோமாக!'' என்று பாசத்தின் பாற்பட்ட வெறியுணர்வுடன் முழங்கியபோது, சபையில் எழுந்த ஆரவாரம் அடங்கப் பல நிமிஷங்கள் கரைந்தன.

அன்றைய விழா இனிது நிறைந்ததும், இரவு விருந்து அமோகமாகத் தடபுடலாக நடந்தது. ஆர்க்காட்டு மக்கள் அந்த விழாவுக்குத் தங்களால் முடிந்த அளவுக்கு உறுதுணைபுரிந்து சிறப்பித்தார்கள். வெள்ளையருக்குக் கையாளாகவும், வேடிக்கைக்கு லோலனாகவும், விபரீதங்களுக்கு ரசிகனாகவும் இருந்த ஆர்க்காட்டு நவாப்பு முகமதலியின் ஆட்சி முடிந்து, ஒரு சுதந்திர சூரியனின் — புரட்சித் தலைவனின் உதயத்தால் கண்ட பிரகாசத்தில் அவர்கள் வெகுவாக மெய்ம் மறந்து போனதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றுமில்லாமலிருந்தது. விஷாரத்துப் பெருங்குடி இஸ்லாமியர்கள் அனைவருமே, ஹைதர் அலியின் வருகையை, எண்ணிப் பூரித்துப் போய் துணைநின்று உதவி, தங்கள் குதூகலத்தை வெளிப்படுத்தி மெய்ப்பித்தனர்.

பொழுது பொன்னாகப் புலர்ந்து கொண்டிருக்கிறது.

உதயம் கண்ட கதிரவனைக் காணக் காண, ஹைதர் அலிக்கு, ரங்கநாயகி எழுதிவைத்த புத்த கவிதையே நினைவுக்கு வருகிறது...

அந்தச் சமயத்தில்...

அலங்கார ரூபனாக அந்த அறையில் நுழைந்து கொண்டிருந்தான் நவாப் திப்பு சுல்தான்!

சாளரத்து வழியாகக் கிழக்கு முகத்தைப் பார்த்தவாறு நின்றிருந்த ஹைதர் அலி திரும்பிப் பார்க்கிறார்...

குமாரன் திப்புசுல்தான் எதற்காக வந்திருக்கிறான் என்பது அவருக்குப் புலனாகிறது!

ஓ...
சமுத்திரம் கொந்தளிக்குமோ?
எரிமலை வெடிக்குமோ?
பூமிதான் பிளவு படுமோ?

''வா, திப்பு. உட்கார்! அலங்காரத்தைப் பார்த்தால் இவ்வளவு காலையில் எங்கோ புறப்பட்டு விட்டாய் என்று நினைக்கிறேன்!''

ஹைதர் அலி இவ்வாறு கூறிக் கொண்டே தமதாசனத்தில் அமர்கிறார். ''இந்த ஆர்க்காட்டு முகமதலி ரொம்பவும் சிற்றின்ப ரசிகனாக இருந்தாலும், கலாரசிகனாகவும் இருந்திருக்கிறான். எவ்வளவு அழகாக அரண்மனையை வைத்திருக்கிறான்.''

அவர் தம்முள் நகைத்துக் கொள்கிறார்...

திப்புசுல்தான் அமரவில்லை. 'நமது தாரியா தவுலத்துக்கு மிஞ்சி இங்கே அப்படி என்ன அழகு கொட்டியிருக்கிறது?' என்று கேட்கத் தான் அவன் நினைத்தான். அதற்கு அவசியமில்லை என்று தனது அவசரத்தையுணர்ந்து ''அப்பா ஜான்! நான் பேரம்பாக்கம் புறப்படுகிறேன்!'' என்றான்.

ஆ! எரிமலை ஆரம்பமாகிறது...

''அதற்கு அவசியமே இல்லை...''

—ஹைதர் அலி சற்றும் தயங்காமல், இனி தயங்கக் காரணமே இல்லை என்பதுபோல, நேரிடையான பதிலுக்குத் தயாராகி விட்டார்.

சில விநாடிகள் புரியாது மலைத்துப் போன திப்புசுல்தான், ''அவசியமில்லை என்றால்?'' என்று கூறுகிற போது அவனது கண்கள்...

மெல்லிய பெருமூச்சு ஹைதர் அலியின் நாசியிலிருந்து வெளிப்படுகிறது.

''நீ நினைப்பது போல பசவராஜ் உயிரான நண்பனுமல்ல, ரங்கநாயகியும் உயிரான காதலியுமல்ல!''

''அப்பா...''

அலறித் துடித்த அந்த அழைப்பு, திப்புவின் நெஞ்சிலிருந்து கொந்தளிக்கிறது...

''பதறாமல் கேள் குமாரா! நான் உனது தந்தை; உனது எதிர்கால நன்மையில் கனவு கண்டு கொண்டிருப்பவன்! நான் சொல்லுவது உண்மையோ, பொய்யோ... நேரில் பார்த்தவர்கள் சொன்னார்கள். பசவராஜும் ரங்கநாயகியும் உனக்குத் துரோகம் செய்து விட்டார்கள்!''

''அப்பா...!''

அந்த அறையே இடிபடுகிற மாதிரி கத்துகிறான் திப்புசுல்தான்...

''அவர்களிருவரும் சொல்லாமல் கொள்ளாமல் சென்ற வாரத்தில் ஒரு நள்ளிரவில் ஓடி விட்டார்கள்!''

ஹைதர் அலி இவ்வாறு கூறி நிறுத்தியதும்..

'ஓ' என்று பூதாகாரமாக அலறுகிறான் திப்புசுல்தான்... ........

எரிமலை வெடிக்கிறது...

சமுத்திரம் கொந்தளிக்கிறது...

பூமி அதிருகிறது...

அந்த மாளிகையே இருபிளவாகப் பிளக்கிறது...

(தொடரும்)

# ஒரு சந்திப்பும் — பிரிவும்

கு. வேங்கடரமணி

கோபுவுக்கு அந்தச் சந்திப்பு அதிர்ச்சியாகத்தான் இருந்தது. இந்த இடத்திலும் இந்த நேரத்திலும் ரேவதியை அவன் எதிர்பார்க்கவில்லை. அவளை மறுபடியும் சந்திக்கும் மனநிலையை அவன் இன்னமும் அடையவில்லை. மனத்தின் எங்கோ ஒரு மூலையில் ஏக்கம் இருந்ததோ என்னமோ, அதைப்பற்றி அவனால் எதுவும் தெளிவாகச் சொல்ல முடியாது. இந்த நிலையில், ஒரு மாலைப் போதில் நகரின் சந்தடி கூடிய சாலையில் ரேவதி எதிர்ப்பட்டதும் அவன் அதிர்ச்சியடைந்தான். எதிர்பார்க்காததின் ஆச்சர்யத்தைவிட, அதிர்வுதான் திடீரெனப் பரவிற்று. அவள் எங்கோ கிராமத்தில் இருக்கிறாள் என்றுதான் அவன் நினைத்துக் கொண்டிருந்தான். எந்தப் பரபரப்பும் இல்லை அவள் முகத்தில்.

''ரேவதி! — நீ, நீ—.''

''ம் — நான் சென்னைக்கு மறுபடியும் வந்து மூன்று மாதமாச்சு...''

மூன்று மாதங்களா? கோபுவின் மனம் மேலும் அதிர்ந்தது.

''ரேவதி! உன்னை இங்கே, இப்போது சந்திப்பேன் என்று எதிர்பார்க்கவில்லை. அதனால்—''

''ஏதாவது பேச வேண்டுமானால் இப்படி நடுச்சாலையில்,' இத்தனை போக்கு வரத்துக்கு நடுவில், எப்படி முடியும்? எங்காவது உட்கார்ந்து பேசுவோம். எனக்குக் களைப்பாக இருக்கிறது. அதிகக் கூட்டமில்லாத ஒரு ஹோட்டலில் காப்பி சாப்பிடலாம்.''

ரேவதி தன்னிடம் முகம் கொடுத்துப் பேசுவாள் என்று கோபு எதிர்பார்க்கவில்லை. இத்தனை அமைதியோடு இந்தச் சந்திப்பை எடுத்துக் கொள்வாள் என்று நம்பவில்லை.

ரேவதியிடம் எதைப் பேசுவது? எப்படிப் பேசுவது? ஒரு காலத்தில் எத்தனையோ பேசியாகிவிட்டது. மனம் கசந்து போகிற வரை— இனிமேல் தாங்காது என்கிற எல்லைவரையில் —பேசியாகி விட்டது. அவர்கள் கடைசியாகச் சந்தித்து — அதாவது இருவரும் பிரிந்து போய் — எத்தனை காலமாகிவிட்டது இரண்டு வருடங்களுக்கு முன்னால் நிகழ்ந்தது அந்தப் பிரிவு. ஒரு வாழ்க்கை என்கிற பிணைப்பின் — கணவனும் மனைவியும் என்னும் உறவின் — பிரிவு அது. இனி இப்போது அவனால் எதை, எப்படிப் பேச முடியும்?

அவள் நடந்தாள், அவனும் நடந்தான்.

'இனிமேல் இந்த வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டே போகிறதில் அர்த்தமே இல்லை. இதனால் நாம் இரண்டு பேருமே மேலும், மேலும் நம்முடைய காலத்தை வேதனையாக மாற்றிக் கொண்டிருக்கிறோம். அதனால் இதை முடித்துக் கொள்வதுதான் நல்லது. நாம் இங்கே பிரிந்து விடுவோம். அதைத் தவிர வேறே வழியில்லை!' —

இரண்டு வருடங்களுக்கு முன்னால் ரேவதி சொன்னாள்.

அவள் சொன்ன வார்த்தைகள்தான் அவனுக்குப் புரிந்தது. ஆனால் குரலின் தொனி, அப்படிச் சொல்லும்படி ஏற்பட்டுவிட்ட மனநிலை எதுவும் அப்பொழுது அவனுக்குப் புரியவில்லை. அன்றைய அவளுடைய உணர்ச்சிகள் பற்றி அப்பொழுது கவலைப்படவில்லை. வாழ்க்கை அன்று அவனுக்கு மிகவும் கசப்பானதாக இருந்தது. எல்லாவற்றுக்குமே அவள்தான் காரணம் என்று நினைத்தான். அவளைக் கல்யாணம் செய்து கொண்டதால் தான், தான் பாழ்பட்டுப் போய்விட்டதாக, தன் வாழ்க்கை குலைந்துபோய் விட்டதாக நினைத்தான், நம்பினான்.

ரேவதி கடைசியில், முடிவாகப் பிரிவைப் பற்றிய பேச்சுக்கு வந்தபோது, 'போ — தொலைந்துபோ!' என்று அவன் மனம் வக்ரமான முடிவுக்கு வந்தது. உண்மையாகவே அவள் புறப்பட்டு விட்டாள்.

கைப்பெட்டியில் தன்னுடைய துணிகளையெல்லாம் எடுத்துக் கொண்டு தன் கிராமத்திலுள்ள தந்தையிடம் போய்விட்டாள் அவள். அந்தப் பிரிவில் அவள் எடுத்துக்கொண்டு போகக் கூடியவை அவை மட்டுந்தானே?

'நிஜந்தான் ரேவதி! அன்று நீ சொன்னது எத்தனை நியாயமானது என்று எனக்குப் புரிந்தது. ஆனால் நீபோய்ப் பலநாட்களுக்குப் பிறகு அதைப் புரிந்து கொண்டேன். உன் மனநிலையும், அப்பொழுது உனக்குள் தீவிரம் கொண்டிருந்த உணர்ச்சிகளும் எனக்குப் புரிய அந்தப் பிரிவு தேவையாக இருந்தது.' கோபு தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அவர்கள் தொடர்ந்து மேலும் நடந்து கொண்டிருந்தார்கள். ஒரு ஹோட்டலுக்குள் சென்று காப்பி சாப்பிட அமர்ந்தார்கள்.

சாப்பிடும்போதும் மௌனந்தான் நடுவில் நின்றது. கடைசியில் பணம் கொடுக்க, சீட்டை அவன் வாங்கிக் கொள்ள முயன்றான்.

''நான் கொடுக்கிறேனே?'' என்று அவன் சொன்னதை மீறி அவளே முந்திக் கொண்டாள்.

''வேண்டாம். என்னிடம் பணம் இருக்கு'' —ரேவதி அவனைப் பார்த்து மிகவும் இயல்பாகவே சொல்லிவிட்டு எழுந்தாள். அவன்

முகத்தில் மென்மையான, பரிவை வெளிப்படுத்தும், புன்னகை பரவியிருந்தது.

கடற்கரைக்குப் போய்க் கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருக்கலாம் என்று ரேவதி சொன்னாள். பஸ்ஸில், கூட்டத்தில் இடிபட வேண்டாம், வாடகைக் காரில் போய் விடுவோம் என்றும் அவளே யோசனை கூறினாள். திருப்பத்தில் நின்று கொண்டிருந்த வாடகைக் காரைக் கோபுதான் அழைத்து வந்தான். கடற்கரையை நெருங்கும்போதே வாடகையைத் தானே கொடுத்துவிட வேண்டும் என்று அவன் தயாராக இருந்தான். ஆனால், ரேவதி இப்போதும் பணம் கொடுக்க அவனை அனுமதிக்கவில்லை.

**கா**ற்றின் குளிர்ச்சியிலும், இதத்திலும் ரேவதி நெட்டுயிர்த்தாள். கோபு மடிந்து விழும் அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனத்திலும் வார்த்தைகள் மோதியபடி இருந்தன. ரேவதி கேட்டாள்: ''ஒன்றுமே பேசவில்லையே நீங்கள்?''

சொல்ல வராத வார்த்தைகளோடு அவன் தவித்தான். ''ரேவதி உன்னைப் பார்த்ததும் ஏற்பட்ட திகைப்பு, அதிலிருந்து இன்னமும் விடுபட முடியவில்லை என்னால்.''

''இத்தனை தூரம் வந்து விட்டோம். நீங்கள் ஏதோ சொல்லப் போகிறதாக எனக்குப் பட்டது. முடிந்தால் கொஞ்சநேரம் இருந்து பேசுவோம். இல்லாவிட்டால் எழுந்து போய்விடுவோம்.''

''ரேவதி!''

''ம்...''

''ஒரு காலத்தில் –'' கோபு திணறினான்.

''ஆமாம் – அந்த 'ஒருகாலம்' இன்னமும் நம் முன்னால் அப்படியேதான் இருக்கிறது. இத்தனை காலமாகியும், அது அழிந்துபோய் விடவும் இல்லை. அதை நீங்களும் மறந்துவிட முடியாது. என்னாலும் முடியவில்லை. அப்போது உங்கள் அப்பா இருந்தார். அதிலிருந்துதான் அந்த 'ஒருகாலம்' – அதாவது நம்மோட வாழ்க்கை – ஆரம்பிக்கிறது. இல்லையா?''

மேலே தொடர்வதற்கு முன்னால் அவனை ஆழ்ந்து ஒருமுறை பார்த்தாள் ரேவதி. அவன் சொல்லப் போவதைக்கேட்கத் தயாரானவன் போல் அவன் அசைவற்று உட்கார்ந்திருந்தான்.

''உங்கப்பா ஒரு லட்சியவாதி. 'பெண்ணைப் போற்ற வேண்டும்' என்று நினைத்தவர். நினைத்ததோடு நிற்கவில்லை. எங்கோ கிராமத்தில் இருந்த என்னோட அப்பாவைப் பார்க்க வந்தவர், என்னை மருமகளாய் ஏற்றுக் கொண்டார். எங்க அப்பாவுக்குச் செலவு வைக்கக்கூடாது என்று எல்லாச் செலவையும் அவரே ஏற்றுக்கொண்டார். எங்கப்பாவிடமும் வசதி இல்லை. என்னை எப்படியோ பி. ஏ. வரைக்கும் படிக்கவைத்து விட்டார். அதுதான் அவரால் முடிந்தது.

''நம்முடைய குடும்ப வாழ்க்கையின் ஆரம்பம் நன்றாக இருந்தது. உங்களுக்கும், நல்ல உத்தியோகம். உங்கப்பாவின் பென்ஷன் வேறே வந்து கொண்டிருந்தது. எல்லாம் ஒரு வருஷம். உங்கப்பாவின் மரணம்... அப்புறம் உங்களுக்கு வேலையும் போய்விட்டது. எல்லாம் என்னால்தான் – என்னோட துரதிருஷ்டம்தான் காரணம் – என்று உங்க மனசிலே ஒரு நினைப்புத் தோன்றி, காலத்தால் வேர்விட்டு, பெரிய மரமாய் வளர்ந்து போச்சு. நல்ல வசதியான இடத்தில் கல்யாணம் நடந்திருந்தால் உதவியாக இருந்திருக்கும் என்று நினைத்து ஏங்கி, அந்த ஏக்கம் என்மேல் வெறுப்பாக வடிந்தது. கொஞ்சம் கொஞ்சமாய், கனமாகிக் கொண்டே வந்து கடைசியில் அது தாங்க முடியாததாகப் போய்விட்டது வேறே வழியில்லை என்று தோன்றியபோது, என்னால் அப்போது செய்ய முடிந்தது ஒன்றுதான். நான் பிரிந்து போய் விட்டேன். மறுபடியும் நாம் சந்திப்போம்,






இதையெல்லாம் உங்களிடமே சொல்லுவேன் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அப்போது சொல்லச் சந்தர்ப்பம் வரவில்லை. அந்தக் கடைசி நாளில் என் பேச்சே உங்களுக்குப் பிடிக்காமல் போய்விட்டது. இப்போது நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ?''

இப்பொழுது அவள் பேசுவதைக் கேட்டுக் கொண்டுதான் அவன் உட்கார்ந்திருந்தான். அவள் இன்னும் ஏதோ சொல்லப் போகிறாள் என்று எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான்.

''உங்கப்பாவின் ஆசை, லட்சியம் எல்லாம் இப்படிப்பட்ட வாழ்க்கையாகப் போய் விட்டதே என்று எனக்கும் வேதனையாக இருக்கிறது. ஆனால் இனிமேல் என்னால் என்ன செய்ய முடியும்? ஒன்று மட்டும் செய்யலாம்—''

''ரேவதி!'' — தான் சொல்ல நினைத்ததை, அல்லது அவளிடம் கேட்க ஆசைப்பட்டதை, அவளிடம் தெரிவித்துவிட அவசரப்பட்டான்.

''அதற்கு முன்னால் உங்களிடம் ஒன்று கேட்க வேணடும். அப்போது உங்களுக்கு வேலை போய்விட்டது. அப்புறம் என்ன செய்தீர்கள்?''

''ஒரு வருஷம் வேலைக்காக அலைந்தேன். பிறகு வேலை கிடைத்தது. சுமாரான வேலை தான். எப்படியோ அதிலே ஒட்டிக் கொண்டிருக்கிறேன்.''

ரேவதி லேசாகத் தலையை அசைத்து விட்டு, ''உங்களைப் பற்றிக் கேட்டுவிட்டேன். என்னைப் பற்றிச் சொல்ல வேண்டாமா? கிராமத்தில் சும்மா உட்கார்ந்திருக்காமல் என்னை ஒரு வேலைக்குத் தயார் செய்து கொண்டேன். டைப்ரைட்டிங் பாஸ் பண்ணினேன். என்னுடைய சிநேகிதி எனக்காகச் சிபாரிசு செய்து வேலையும் வாங்கிக் கொடுத்தாள். நான் வந்து மூன்று மாசமாகிறது'' — என்று சொல்லிக் கொண்டே வந்தவள் சிறிது நிறுத்தினாள்.

விளக்குகள் எரியத் தொடங்கின. இட ரென்று நேரமாகிவிட்டதை உணர்ந்தவள் போல், ''புறப்படலாமா?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்தாள் ரேவதி.

மணலில் அவளோடு நடந்து கொண்டே, ''கடைசிவரையில் நானேதான் பேசிக் கொண்டிருந்து விட்டேன். நீங்கள் அதிகமாகப் பேசவே இல்லை. ஆனால் உங்களுக்கு இப்போது என்மேல் கோபமோ, வெறுப்போ இல்லை என்று புரிந்து கொண்டேன்'' என்று அவனைப் பார்த்தாள்.

கோபுவுக்கு மூச்சுத் திணறியது.

''உங்கப்பாவின் ஆசையைப் பற்றிச் சொன்னேனு? அவர் நாம் இரண்டுபேரும் சௌகர்யமாய் வாழணும் என்று ஆசைப் பட்டார். எனக்கு நல்ல வேலை கிடைச்சிருக்கு. நிறையச் சம்பளம் வருகிறது. அதனால்—''

''அதனால்?''

''நீங்கள் சுமாரான சம்பளம்தான் வாங்குறதாகச் சொன்னீர்கள். அதனால் என்னுடை சம்பளத்தில் ஒரு பகுதியை உங்களுக்குக் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். உங்க அப்பாவின் ஆசையும் ஒருவிதத்தில் நிறைவேறிவிடும். நீங்களும் சௌகர்யமாக இருக்கலாம்.''

தெரு விளக்கின் வெளிச்சம் அவள் முகத்தில் பட்டபோது, பரிவான புன்னகைதான் தெரிந்தது.

இருவரும் பஸ் நிற்கும் இடத்தை அடைந்த சமயம் அவள் செல்ல வேண்டிய பஸ் சிறிது தூரத்தில் வந்து கொண்டிருந்தது.

ரேவதி கைப்பையைத் திறந்து தன்னுடைய விலாசம் அடங்கிய அட்டையை அவனிடம் எடுத்துக் கொடுத்துவிட்டு பஸ்ஸில் ஏறிக் கொண்டாள். அதில் அதிகக் கூட்டமில்லை என்பதைப் பார்த்தபடி நின்றான் கோபு.

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு